


உ

செந்திலாண்டவன் திருவடி துணை.

# சிவாத்வைதரத்னமாலா

——÷——×(○)×(○)×——×——

இவ்வுபநிடதத்தைத் தமிழில் மொழிபெயர்த்த

திரிசிரபுரம்

திரு. சிவாநந்தசாகரியற்றிய

## சிறப்புப்பாயிரம்.

——=—○+○—=——

மலர்தலையுலகத்திலகுபல்லுயிரும்
பண்டையவினைக்கட்டுண்டுழலாமே
சுருதிகண்முழங்குந்துரியவான்பொருளை
மனமொழிகடந்தவனகனைப்புருடனை
யாயிரங்கண்ணனையற்புதமூர்த்தியைக்
காளகண்டனைக்கண்ணுதலொருவனைத்
தானெனவறிந்துதன்னகத்தேத்தி
வானிருள்கடந்தவளமலிபரமா
னந்தந்திளைப்பச்சிந்தைகனிந்து
மங்களவல்லிமறைபுகல்கிள்ளை
பிரமஞானப்பேரருள்செல்வி
முத்திச்செல்வமுகந்தருளன்னை
ஞானங்கல்வியந்தொக்கருளும்
ஆனந்தக்கொடியருள்வடிவுமையாள்
மாயவன்வடிவாய்வழங்கியபுருட
சூத்தத்துறு பொருடோன்றுதொருசிலர்
கருதியவாறேகழறிவிடுத்த
சழக்குரையனைத்தும் வழக்கறவொளிப்பப்
பரசிவஞானப்பரிதியுதிப்பச்
சிவாத்துவைதச்செல்வந்துலங்கச்
சற்சனருள்ளத்தாமரைமலரப்
பாசவிருட்குப்பகையிதுவென்னப்
பாற்கடல்கடைந்து பண்டொருகெடுமால்

பாயிரம்

ஆக்கியவமுதத்தனைவரும்கொள்ளப்
புத்துரைவகுத்துப்புவிமுழுதொளிரச்
சீனிவாசியமெனப்பெயர்சிறப்பத்
தந்தனனருஞ்சந்தனத்துணியும்
முத்தணிபவளமும்முழுமணிவயிரமும்
இருகரைசொரிந்துபெருகுறுபொன்னிக்
குடந்தையம்பதியிற்குவலயமதிக்கும்
கவுணியமரபுதவகனிசிறப்ப
வந்தவரித்தமாசிலாமறையோன்
கலைபலவுணர்ந்தபுலவர்சிகாமணி
'கைவல்யம்'' அவிமுத்தஜாபாலம்,
'வச்சிரசூசி' மறைமுதற்பாடியம்
விரி "த்தத்துவவிதவிசாரம்' "வைதிக
வர்ணநிர்ணயம்' "வேதாகமப்பிர
மாணிய மாரியாசாரரகசியம்'
விக்கிரகாராதனங்குருசீட
வேறுபாடுமுதற்பலவைதிக
நூல்பலவியற்றிமால்வயப்பட்ட
நாத்திகர் வெருவப்புத் தியான்மாவும்
சரீரமுஞ் 'சன்மாந்திர' ங்கன்மம்
கடவுண்மறுமையெனப்பலபுனைந்தோன்
அறுபகைகடந்துபொறிபுலனடக்கி
எங்குஞ்சிவமாயிருந்துணர்பெரியோன்
"தியாகராஜதீட்சிதநாதன்'
பொன்னடிபுனையும்சென்னியன்ஞானப்
பூங்கொடிமணந்தபுராரிமால்விடையோன்
ஒருவனேயன்றிப்பிறிதொருகனவினும்
பொருளெனமதியாக்கருளிரிமனத்தோன்
சங்கம்பொங்குந்தண்டுறைச்செல்வன்
பாற்கரசசேதுபதிமகாராஜன்
அவைக்களம்விளக்குந்தவக்கடலன்னன்
தனையெதிரில்லாப்பாரதகோளரி
'சீனிவாச' தீட்சிதேந்திரனே

---

பாயிரம்

உ

செந்திலாண்டவன் திருவடிதுணை

சேதுராமபாரதியார்

இயற்றிய

சிறப்புப்பாயிரம்.

—— ×°× ——

திருமலிபுருடச்சுருதிகற்புடைய
பெண்ணணங்கொத்துக்கண்ணுதற்பரமனைத்
தன்னுயிராகத்தழுவியதன்றிப்
பின்னொருதேவைப்பேணியதின்றென
அப்பையமுனியாதத்தாசாரியர்
ஒப்பொருமிவர்முதலுண்மைதெளிந்தோர்
கூறியவாக்கொடுமாறுபாடெய்தித்
தம்மனப்படியேசாதித்தெழுதிய
பொய்ம்மலியுரைபோய்க்கடல்புக்கொளிப்பச்
சிவாத்துவைதச்செல்வந்தழைப்பச்
ஸ்ரீவாசதீக்ஷிதரவமணி
தேனமுதென்னச்சீரியர்கொள்ளத்
தானுரைவிரித்தசிவாசிய
பாடியமூலநிற்பரந்துபல்லுயிரும்
வீடெளிதெய்தும்விருப்புறுசிந்தையன்
மறைபலபரவுமறுமுகக்குமரன்
பொன்னடிபுனையும்சென்னியன்மறையோன்
சரவணோற்பவானந்ததேசிகன்பொற்
பாதபங்கயமேபற்றெனப்பெற்றவன்
அருணிறைதெய்வத்திரிசிரபுரம்வாழ்
திருசிவானந்தசாகரனவன்பால்
தடையறவுணர்ந்தபடிமொழிபெயர்த்துப்
புருடச்சுருதிமந்திரந்தனையும்
தந்தவனெனக்குச்செந்தமிழுதவிய
குருபரனருணீடுழிவாழியவே.

———

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## குருஸ்துதி

திருவளர்பிரமஞானநால்வேதச்சிரப்பொருண்மூவிருகலைகள்
ஒருவருசாந்திதாந்தியாதியவுமுளமமர்துணையெனச்சிறப்ப
மருவியெஞ்ஞான்றுமுடிவிலாக்கருணைமழைபொழிந்திலகியபரம
குருபரன்கமலமலரடிபணிந்துங்குறைவிலாநலனுறல்குறித்தே.

## விநாயகர்

மாதுவல்லபைவாணமுகபங்கயப்
போதுகண்டருள்பூத்தவிலோசனத்
தாதியன்பர்கருதியவாங்கருள்
காதலின்பநலம்பெறநல்குமே.

## குமாரகடவுள்

பழமறைச்சிரத்தினமர்மனுப்பொருளைப்படிமுழுதளித்தருணியமலை
விழியளிமுழுவெழிலமுதருந்துமயபவனம் முகமலர்நிரைக்குப்
பொழிகதிர்ப்பரிதிவளனுறவளித்தப்பொலிதருசுடரினைமயின்மே
லழகனையாறுமுகப்பரம்பொருளையடிமலர்பரவிவாழ்குதுமே.

## பரசிவன்

அளவறுமறையர்பிரங்கணனீசனருளன்றற்புருடனீசானன்
ஒளிவளர்சிவனசத்தெனுமபதப்பொருளாயுறுபகலிரவணைந்தாங்கு
வளமலர்வதனத்துமையொருகூற்றின்மயங்கவாளுடுவெடிவான
இளநிலவணியுமுழுமுதற்சுடரைப்பமிதயவாலயத்தேர்ளீர்தருமே.

## உமாதேவியார்

தருமிழலிறைவன்மறைமுடிவிருந்தத்துவப் பொருள்கொளத்தெ
ருட்டி
வாமவிபுருடகுத்தமால்வடிவாய்வழங்கியபிரமவிந்தையதாம்
அருணிறைஞானசத்திமால்வரைவேந்தரும்பெறற் குமரியெம்மித
யத்
திருள்கெடுத்தமலவறிவளித்தருமிறைவிவான்சரணமணைமக்கே.

## திருமால்

பந்தமூற்றறுக்குமாற்றல்படைத்தமாவிஞ்சைதன்னை
முந்தியகுரவன்பாற்கொண்டவிச்சையைமுனிந்துதீர்ப்பான்
கந்தமென்மலர்மேலானுங்கருதுசற்குரவனாய
விந்திரைகேள்வனல்வாக்கெமக்களித்தருளுமன்றே.

## அப்பையதீக்ஷிதேந்திரர்

—*( )*‿*‡(*)†*‿*( )*—

யானெனுபாஞ்சராத்திராதிலவர்பயிராக்களையனையவரால்
வாணிவைபச்சிர்கிலே தடுமாறவந்தவிக்கவியின்மாயைமாற்றிவோர்
தானுவையதிலகாரணமுதலைச்சார்ந்துயுமாறருள்சுரந்த
சேணுலாமலகில்புகழ்மலியமலதீக்ஷிதர்தாளைவலந்தருமே.

## பாடியகர்த்தர்
## கூறிய அவையடக்கம்

——o(*)——

(௧) உலகெலாம்பரவுசிவவுலாஞ்சடிலத்தும்பர்கோனடஞ்செயுமாலை
நலமெலாமலிந்திணையொடுங்கருடனல்லியசகுளைமுன்னோக்கி
*"அலகிலாப்பெருமையப்பவனைப்பொலிதியைபரி"யெனவருள் சுரந்து
கலையெலாமலிந்தகுருபரன்வாக்கைசைவிடாப்பற்றெனக் காமால்
அத்திறனளித்தநாதனருளினைச்சிரமேற்கொண்டு
சத்தியஞானநந்தளிப்பாமுத்தியர்க்குஞ்
சதுஜிக்குமாறுவேதச்சிரந்துமோதுகின்ற
தத்துவப்பொருள்விரித்துச்சாற்றிடத்துணிந்தேனன்றே.

---

* இப்பாடியகர்த்தர் தமதாசிரியர்பால் பரிபோத்சுருஷங்கூறப் நூலுரைகேட்டான் தொடங்கிய உலகெலாங்கடந்த உமாபதி பரமானந்தத் தாண்டவகாலமாகிய மாலைப்பொழுதில் இரண்டு கருடன் வானிடத்தே திர்ப்பட்டிலாவி மங்களாத்தெரியாற்குணர் தந்தருளக்கண்டு மனமகிழ்கூர்ந்த போதகாசாரியார் பவதேவனென்னைவுலகத்தில் விளங்குகவென்றாசீர்வதித்தனர். அவ்வாசீர்வசனம் பலித்தமையால் அதனையேவியந்து குறிப்பித்தனர். பவதேவர் சைவபாடிய கர்த்தர்களுளொருவரென்றுணர்க.

செந்திலாண்டவன் திருவடி துணை

திருவடி துணை

# புருடசூக்தம்.

## முகவுரை.

---

சீர் பெருகு மிவ்வுலகத்தின்கண் கலிகாலக் கொடுமை மிகுதிப்பற்றித்திருவருட்செல்வங் குறைவுறத், தாந்திரீக விருகாற்பசுக்கள் பலதோன்றி, அபௌருஷேயமும். பரமபுருஷார்த்தம் பயக்கும் கற்பகமுமான நமது வேதபபெருநிதியை ஒருவாறொதுக்கி யொழித்து அவமதித்துவருவதை அறிஞர்க்கறிவுறுத்தவேண்டியதன்றே; இங்ஙனமிருக்க, இளம்பிறை சூடிய இறைவன் இணையிலாபெருமை ஒரேவழி ஒளிர்ந்திடநேர்ந்திடலால்அம்மா!எவ்வுயிர்க்கும் திருவுள்ளக்கமலத்தில், சுருதி முடிகள் கொண்டாடும் சிகரில் பெருமைதாங்கியதூஉம்,தோன்றுவன வெல்லாவற்றிக்குந் தோன்றுமிடமாயதூஉம் சத்து:பிரமம், பிரணவம், ஓங்காரம், மகாதேவன், புருஷன், சகஸ்ராட்சன் சிவன், பவருத்ரியான பல நாமங்களால் ஆன்றோர்க்குத்தன்னருமையை யறிவிக்கு மாற்றலுடையதூஉம், கருக்குழி நாற்றங்கமழப் பெருந முழுமுசற்பொருளும், ஆண்மை நீங்காவாதி தேவனும், புருடர்களெல்லாரும் போற்றும் புண்ணியப்பொருளும்,சர்வ புருஷார்த்ததான சுதந்திரமும், தந்திரப்பயிற்சி மிகுந்தபாமரர் அறியாப்பரம் பொருளும், திருமால் திருவாய்மலர்ந்தருளிய மாண்மியப்பேறு பெற்றதூஉம், வேதாந்தங்களில் இடைவிடாது நிஷ்டைகூடிய நிர்மலருள்ளத்துத் தாண்டாமணி விளக்கா யமைந்ததூஉம், எச்சமையத்தும் மற்றெப்பொருளையுமுணர்த்தாத வாற்றலமைந்த திரிலோசனன், உமாசகாயன், உமாபதி, விருபாட்சன் என்றற்றொடக்கத்தனவான திவ்யநாம தேயங்களாபரணமணிபறைந்த நற்காரண வாக்கிய உட்பொருளானதூஉம், பரமேசுவர பட்டம் பெற்றதூஉம், உலகெலாமீன்றருளும் உமையென்னும் பிரமவித்தையின் திருவுள்ளங்கவரும் மங்களநாயகனுமாகிய அம்முழுமுதற் பொருள் எங்கோவெனத்தேடநேர்ந்தது. அந்நான்று ஸ்ரீபகவத்சங்கரமுனிராஜன், ஸ்ரீஸ்ரீகண்டயோகி, ஸ்ரீபவதேவபண்டிதர், ஸ்ரீசுதர்சனாசாரியர், ஸ்ரீமதப்பயதீக்ஷித சுவாமிகளாதி பரமாசாரியர்களால் குன்றிலும், காட்டிலும், கடலிலும் கடைந்து தேடியெடுத்தாற்போலப்புறமதவாத விடையூறு நீக்கிவெகு பரிசிரமத்துடன் விளக்கப்பெற்றும் அதை அறிந்துய்பவர் அற்றிடக்கால நேர்ந்ததே யென ஆருந்துயரமுற்று, இஞ்ஞான்று தோன்றுந்திருவருட்பிரகாச வள்ளலார்களாகிய சிவஞானச்செல்வர்கள்சிறிது திருநோக்குத் தீட்சை

செய்து எமக்கிட்ட ஆணையை மேற்கொண்டு ஆசிரியன் கருணையென்னு மழியாக்கவசம் பூண்டு பரமசிவன், சிவபரிவாரம், சிவபூசை சிவசின்னமிவற்றின் பெருமையைப்புகட்டும் புண்ணியோபநிடதங்கள் பதினெட்டையும் புருடசூக்தத்தோடு சேர்த்து, அதிக விரிவின்றி யோர் பொழிப்புரையால் அலங்கரிப்போமாக.

அவற்றுள் ஆதியில் எல்லாக்கடவுளரும் தாமாகவிருக்கப் பெற்ற கண்ணுதற்பெருமான் பெருமையை விளக்கும் புருடசூக்த உபநிடதத்தை * யஜுர்வேதவழிபற்றி உரை விரிப்பாம்.

இப்புருடசூக்தம் இருக்குவேதத்தில் பதினாறு இருக்குகளாகப் படிக்கப்பட்டிருப்பினும், தொல்லாசிரியர் விசாரித்தருளிய வழியே இதனடுத்த அநுவாகத்தையும் கலந்து உரையிட முயன்றும். இப்புருடசூக்தமே உபநிடதங்களில் சேர்ந்ததென்றறிக.

அற்றேல் "போதாயனர் முதலிய முனிவர்கள் பலர், இப்புரு
'டசூக்தத்தைப் பலவிதவிரதங்களில் பல தேவதைகளைப் பூசிக்குமிடம்'
'உபயோகித்தார்களாதலால் இதன பொருளிஃதெனத் துணியப்படாது'
'பலவிதமாக நிற்றலே வேண்டும். அங்ஙனம் சிவபூசை முதலிய சிவ'
'வழிபாட்டிலும் இம்மந்திரங்களை யான்றோர் விதித்திருத்தலால் அதற்'
'கேற்பச் சிவபரத்வமாக இதற்கோர் பொருளாமாயினும் அதுவினியோ'
'கத்திற் கேற்பமேதாவிகள் கற்பனையாமேயன்றி அதனுண்மைப்பொரு'
'ளாகாது. உப பிரம்மண முதலிய பலகாரணங்களாலச்சூக்த,
'த்துக்க மைந்த பொருள் இஃதென மூற்கலோபநிடதம்'
துணிந்தோதியது ஆங்குக்கண்டுணர்க. வேதங்களெல்லாவற்றிற்'
'கும் ஒரே உரையாசிரியராய் விளங்கிய ஸ்ரீமத்சாயனமாதவாசாரி'
'யாரும் அவ்வழியே நடந்தாராகலான் நமது முயற்சி பயனற்றதே'
'யெனிற் கூறுதும்.

இப் புருடசூக்தத்திற்கு விநியோகத்திற்கேற்பப் பல உரைகளுண்டென்பது உண்மையாயினும் 'விசேடமழி வேறிலையே' யென்றுணர்

---

* யஜுர்வேதவழிபற்றி யென்றது:— இப்புருடசூக்தம் இருக்கு, யஜுஸ், சாமமென்னு மூன்றுவேதங்களிலும் படிதமாயுள்ளது. யஜுர்வேதத்தில் இருபத்துநாலுமந்திரமாய் இரண்டு அநுவாகப்பகுப்புடன் விளங்குகின்றது. ஏனைய பதினாறுமந்திரமேகொண்டன. முன்னோர் யஜுராரணியத்திற்கூறிய புருடசூக்தத்தங்கேபாடியம் வகுத்தனராதலானும், யஜுஸில் புருடசூக்தத்தைத்தொடர்ந்துவரும் அடுத்தபகுதிகள் முற்றும்சிவபாரம்யங்கூறிவருவதலானும் அதுசிவபரமெனச்சாதித்ததிற்குப்போந்த ஆதாரமாய் நிற்றலானும்என்க. இதனைத்தொடர்ந்தே தைத்தரீயம் மகோபநிடதமுதலியவுபநிடதங்கள் அமைந்துள்ளன.

சொற்றொடரிவ் வுபநிடத்தின் கண் அமைந்திருத்தலால் இதைப்பல கட வுளரைக்குறிக்கும் பதவுரை யாக்கலாகாது. ஒவ்வொருகடவுளரைக் குறிக்குமிடம் அவர்வழிபாடன்றிமற்றது வீடுகூடல் ஏதுவாகாதெனக்கூறிடின் இவ்வுபநிடதம் உன்மத்தர் கூற்றெனவுயர்ந்தோ ரொதுக்கிடநேரிடும்- விவாதி!! 'வேஸாம்லதைவிண்டுவைப்பெற்றதென' வாரணங் நிய நூலும் புராணங்கள் அதைப்பின்பற்றியநூலும் நீயறியாமையென் கொலோ!! அங்ஙனம் 'மாகேந்திரஸ்தோத்திரத்தின்' பெயராய பிரஷ்ட (வ்ரூஷ) மென்னும் சொல், ஓரிடம் 'ரதந்தர'மென்னும் சாமத்திற்குப் பெயராய்வேதமே விரித்ததும், 'பசு' வென்னும் சொல் 'ஆவினத்தையும் அசுவத்தையுமேகுறிக்கு' மெனப்புகன்ற நூலும் நீயறிந்திலையோ? மேற்கண்டவாக்கியங்களைக்கொண்டு 'வேஸாமலதை நாரணனுக்கு அப்ப'னெனவும் 'பிரஷ்ட' மென்னுஞ்சொல் 'ரதந்தரத்தையே' கூறுமெனவும், 'பசு' வென்னும் சொல் பசுவையும், ஆவினத்தையுமே கூறுமெனவும் நீவிர் ஒப்புவீரோ? "சந்நோ" வென்னு மந்திரத்திற்குச் சனிபொருளெனவும் "உத்புத்யஸ்வ' 'உதீருஷ்வ' என்னு மந்திரத்துக்குப் புதன் பொருளென்றும், அவரவர் பூஜையில் விநியோகிக்கப்படுதல் ஒன்றைக்கொண்டே அப்பதங்கட்கு அதுவே பொருளென நும்மாலாதல், நுமதாசிரியராலாதல் நாட்டுதல் கூடுமோ,

நிற்க, சுருதி, லிங்கம்முதலிய அறுவகை ஏதுக்களால் உண்மைப்பொருளையறியவேண்டு மெனக் கூறுதல் எவ்வான்றோராலு மறுக்கப்படாவுண்மை. ஆசி எவ்வாரணப்பகுதி எப்பொருளின்கண் சுருதி முதலிய அறுவகைப் பொருள்நிருபிக்க நிலைபெறுவித்துள்ளது அப்பொருளே அம்மந்திரத்துக்கு உண்மைப்பொருளென்பது மந்திரவியலறிந்த மாமுனிவோர் துணிபு. அங்ஙனமின்றி 'இப்புருஷசூக்தம்' கணைமிடற்றண்ணலைப் 'நாராயணப்பொரு' ளெனக்கண்டோதியதென ஸ்ரீமத் அப்பய்யதீக்ஷிதராதி மஹநீயர் லர் தாங்களியற்றிய நன்னூல்களில விளக்கியுள்ளனர். யாமும் ஈண்டும் விவாய் ஒன்றிரண்டு மந்திரங்களுக்குப் பொருள் கூறிமட்டது விளக்கிக்காட்டுவோம்,

பண்டிதர் வேதங்களைப் பொருட்படுத்த முயன்றவிடம் அவ்வேதமே மற்றோரிடத்து எவ்வதத்திற்கு எப்பொருள் கூறியதோ அதே பொருளையாண்டும் கொள்ளவேண்டு மென்பது அரசனிட்ட ஆணையாகாது. அது வேறு அளவைகளுடன் முரணுமாயின் பயன்படு மென்பது பொதுவிதி. அங்ஙனமில்வழி "பசுவை வெட்டல் வேண்டும்' என்பதாதி

விதிகளால் பற்பல விபரீதப்பொருள் தோன்ற (1) தீவினைகளெவ்வளவோ விளையும்.

ஆகவே அவ்வப்பிரகரணங்களுக்கேற்க அவை ஏற்றனவெனவிட்டொழிக. இவ்வழியை நம்மவருங் கடைப்பிடித்தார். எவ்விடமெனில்-(2) துரோணகலசத்தைப் பிரதிஷ்டை செய்து அதனிடம் சோமரசத்தைத் தெள்ள வினியோகிக்கப்பட்டும், அதற்கேற்ப பாஷ்யக்காரர்களாலுரையிடப்பட்டுமுள்ள 'அதப்ததநு' என்று தொடங்கிய மந்திரத்துக்குப் பிரகரணவிருத்தமும் வேதநிந்திதமுமான சூட்டுக் கோற்பொருளை நாட்டுமிடத்தாமென நம்மவர் நூலுண்மையைக்கண்டடங்குக.

ஆதலால் சுருதிமுதலிய (3) அறுவகை அறிகுறிகளைக்கொண்டு இச்சூக்தத்திற்குப்புருடனைப்பொருளெனவுரையிடுதல் எவ்வழியானும் குற்றப்படாதென்று தெளிக.

---

(1) தீவினைகளாவன:- பசுவெனும் சொல்லுக்கு, பரீ அல்லது ஆவேபொருளெனக் குறிப்பிடுதலால் அச்சொல்லுக்கு ஆவையும் பரியையுமன்றி வேறுபொருள் கூறலாகாவென்னும் பக்கத்துப்பசு வேட்குமிடத்து அஜத்துக்குப்பதிலாகக் கோஹத்திபுரிய நேருவது போலென்க.

(2) துரோணகலச மென்பது: சோமரசம் சேர்த்து வைக்கும் ஓர் யக்ஞபாத்திரம். அது தோணிபோன்று இருத்தலாலும் 'துரோணம்' எனும் ஓர் அளவமைந்திருத்தலாலும் 'துரோணகலச' மெனப் பெயராயது. ஆலந்தருவிற் செய்யப்படுவது.

(3) அறுவகைக் குறிகளாவன:- சுருதி, லிங்கம், வாக்கியம், பிரகரணம், ஸ்தானம், ஸமாக்கியை, என்பன. சுருதி, லிங்கம் இவைகளிந் நூலிறுதியிற்காட்டப்பட்டன. வாக்கியம் = 'புருடனன்றே ருத்திரனென்பதாதிகள் உயர்காயத்திரிப்பொருளாகிய உமாபதியின் பெருமைவிளக்கும் சூரியமண்டலவித்தையே பிரகரணம். சூரியமண்டலத்தைக்காட்டி மண்டலாதிபதியை விளக்குமிடம் ஸ்தானம் புருடனைக்குறிக்கும் பகுதியெனப்பொருள்படும் புருடசூக்தமென்னும் பெயர் சமாக்கியை.'

உபக்கிரமம் (ஆரம்பம்) ஆயிரஞ்சென்னியன் உபஸங்காரம் (ஈறு) இரவும்பகலுமிருபாலரும், தாரகைகளனுருவாரும் என்பன. அப்பியாசம் (ஒரேபொருளைக்குறிக்கும்பலசொற்கள்) 'அமிர்தத்தன்மையதீசானன்னே சென்னியினின்றுகாயமுண்டாயது, பிரமன்முன்னரெவனைக்கூறினன்' அந்தப்புருடனை மகானையாதித்தவண்ணனை, என்பதாதி, அபூர்வதை (வேறளவைகளாலறிந்தறியப்படாமை) புருடசூக்தத்திற் சொன்ன விராட்டுபொஸ்தி வேறெங்கும் விரிக்கப்படாமையாலென்க. பலம் = (பிரயோஜனம்) 'வீடுகூட்டவழிவேறிலையே' என்றதனால் விடுபயன், அர்த்தவாதம் = விராட்சிருஷ்டி, தேவமானசயாகம்முதலியன.

காரணப்பொருளை யறிந்தவன் காரியப்பொருள்களை உணர்வானென்பது திருஷ்டாந்தமாக இச்சூக்தத்தின் உண்மைப் பொருளாய உமாபதி உலகமெலாமாய பொருளாகவே அவனைக்குறிக்கு மிச்சூக்தம் எக்கடவுள்வழிபாட்டினும் உபயோகிக்கப்படுவது உசிதமேயெனக்கொண்டு எவ்வழியும் முரணுதலில்லாத விந்த நல்வழிகளைப்பற்றி நன்மை கடைபிடித்தொழுக. இனி விரிக்கிற்பெருகும்.

முகவுரை முற்றும்

---

உபபத்தி= (ஏதுக்கள்) "புருடனே சென்றது வருவதெவை யவையெல்லாம்" என்பதாதி இபபதின்மூன்று கருவிகள் கொண்டன்றி வேதப்பொருள்கள் கண்டறிதல் கூடாதென்பது நூற்றிணிபும் ஆன்றோர் கொள்கையுமாம். ஆகையாலிப் புருடசூக்தத்துக்குச் சிவபரஞ்சுடரே பொருளென நாட்டுதற்கு அப்பதின்மூன்று கருவிகளையும் பிரயோகித்தவாறுகாண்க, இதன் விரிவு யஜுர்வேதாரணியகத்துக்கு இப்பாடிய கர்த்தரியற்றியமாபாடியத்துட்காண்க.

## சூக்தஉரை

இச்சூக்தத்துக்கு, 'நாராயணனென்பவன் ருஷி, இறுதியிலுள்ள மந்திரம் திருஷ்டுப்பு சந்தஸ்' மற்றவைக்கு அநுஷ்டுப்புச்சந்தஸ், அவ்வியக்தம், மஹத்து முதலிய தத்துவங்களுக்கு வேறாயும் சேதனனாயும் புருஷனிலும் வேறில்லை, என்பதாதி சுருதிகளிற் பிரசித்தனாயுமுள்ள புருடன் தேவதை; இதற்கேயாஸ்கமுனிவரும் 'ஸஹஸ்ரசீர்ஷா' 'முதற்பதினாறு, நாராயணன் ருஷி, புருஷன் தேவதை, அநுஷ்டுப்ச் சந்தம். இறுதியில் திருஷ்டுப்பு விநியோகம் முற்கூறினும்' என்றநுக்ருத்தம் செய்தருளினர்' என, சாயணமாதவாசாரியர் இப்புருஷசூக்த உரைக்கு முகவுரை கூறினர்.

ஈண்டு நாரயணரென்பவர் ருஷி' என்றதனாலும், யஜுர்வேத ஆரணியகபாஷ்யத்தில் "நாராயணனெனப்படும் ஓர் இருஷி இதைக்கண்டமையால் இதற்கு நாராயணமென்று பெயர்" என்றதனாலும் ஆசிரியர் மாதவர் கருதியது. "உம்மை விரிக்கும் இம்மகோபநிடதத்தை நாராயணன் கண்டானாதலினதனை நாராயணமென்பர், அந்தகாரீ புருடசூக்தம் போல' என்று ஆசிரியர் ஹரதத்தமூர்த்திகள் அன்றருளிய பொருளைத் தழுவி 'வாமதேவியம்' சாமம் என்பனவாதியிடங்களில் அவ்வம்மந்திரத் தொகுதிகளை அவ்வவ்விருடிகளின் பெயராலழைப்பதுபோல் இதற்கும் 'நாராயணமென்றுபெயரமைந்ததேயன்றி, நாராயணனை உட்பொருளாய்க்கொண்டமைந்ததல்லவெனபது மற்றோரிடத்தில் விரிப்பாம்,

### மந்திரம்.

---

(க) திருவளராயிரஞ் சென்னியன் புருடன்.
ஆயிரங்கண்ணனாயிரம்பாதன்
அவனேயுலகை
விச்சுவத்தை வியாபித்ததன்மேல்
ஈரைந்தங்குல மிருந்தனனென்ப.

இதின் முற்பாதியில் பிரதிபாத்தியத்தின் தணிவுகூறப்படுவது. அதில் புருடனென்னும சொல் 'எக்கடவுளரையுங் குறிக்கும் விசேடச் சொல்லாகாது; அச்சொற்குச் சேதனனேபொருளாதலின் அப்பொருளைக்கொண்டே' அவ்வப்பிரகரணங்களிற்புருடசப்தம்சேதனசாமானிய முகத்தால் விசேஷத்தையும் உணர்த்துதல் கூடுமாதலின் அப்புருடச் சொற்கு அமைந்த பொதுவாற்றல் அன்றி அவ்வப்பிரகரணங்களுக்கேற்ப ஒவ்வோர் கடவுளரிடம் விசேட ஆற்றல்கற்பித்தல்(1)லைஹிராஜ)

---

(1) இங்கியாயத்தின் வரலாறு (பர்ஹி:-ஆஜ்யம்) இவ்விரு சொற்களும் ஆரியர் வழக்கில் ஸம்ஸ்காரம் செய்யப்பெற்ற தருப்பைமுதலிய புல்வகையையும்ஸம்ஸ்காரம் செய்யப்பெற்ற நெய்யையுமே குறிக்

ந்யாயத்திற்கு விரோதமென்றும்,

'அதனால் புருடசூக்தத்துக்கு நாராயணன் விசேடப் பொருளாகானென்றும் ஸ்ரீகண்ட வித்தியாசாரியராகிய ஸ்ரீமத் அப்பையதீட்சிதஸ்வாமிகள் அருளிச் செய்தனர். ஆயினும் சிவன் கிருஷ்ணன் முதலிய சொற்கள் 'பரமமங்களன்' 'கரியனென்னும்' பொருளைக்கொண்டே முடிவனவாக(1)க்கோசங்களில் காணப்படுகின்றன. ஆயினும் விசேடமாய்ப் பரசிவனும், திருமாலும் பொருளென அதேகோசங்கள் வேறிடத்தில் எடுத்தோதுவதால் மேற்கண்ட நியாயத்தை விசேடப்பொருளைக்குறிக்கும் கோசாதிகளில்லாவிடமே உபயோகிக்கவேண்டும். அங்ஙனமில்வழி, (2)'கிருஷ்ணன் தேவதை, 'சிவன் தேவதை, என்பதாதி ஆன்றோர் வழக்கவலமாம்.

அற்றேல் 'அவனிவன் புருடனைப்போன்றவன்' 'பதினாறுகலைகள் புருடனிடமுள்ளன' என்பதாதி வேதவாக்கியங்களில் புருடனென்னும் சொல் சரீரத்திலும் ஆன்மாவினிடத்திலும் விநியோகிக்கப்படுதலால் அவ்விரண்டுமதன் பொருளாகலாம்; நாராயணனிடத்து விசேடசக்தியைக்குறிக்கும் பிரமாணமேதுமில்லை. 'புருடனன்றோ நாராயணன் சங்கற்பித்தானென்னுமிடத்துப் புருடசப்தம் நாராயணனுக்கு அடையாக விநியோகிக்கப்படினும், அங்கு நாராயணனென்பதே விசேடியமாய் நின்று, புருடனென்னும் சொல்லுக்கு நாராயணனைப்பொருளாகக்கொட்டாது தடுக்கின்றது. அங்ஙனமின்றி அப்புருடச்சொல்லுக்கு நாராயணனேபொருளாயின் இரண்டுமொருபொருளைக்குறிக்குஞ்சொற்களாய்'கலயங்குடம்' என்பதாதி சொற்றொடர்களைப்போல உத்தேசியம், விதேயமொன்றுபட்டு வாக்கியமே பொருளற்றதாய் முடியும். அங்குசாமான்யவாற்றலைக்கொண்டு சேதனப் பொருளெனக்கொள்ளினும் குற்றமேதுமில்லை. ஆதலால் இவ்விடம் புருடனென்னும் சொல் சாமானியச் சொல்லேயன்றி விசேடச்சொல்லாகாது' எனில் அற்றன்று.

---

கின்றது. இச்சொற்களை முறையே 'புற்சாதி' மாத்திரையிலும் நெய்மாத்திரையிலும் ஆரியரன்றி மற்றோர் உபயோகிக்கின்றார்கள். இவ்வண்ணமாயிருக்க இதன்பொருள் 'சாதி' மாத்திரமா அல்லது 'ஸம்ஸ்கார, முஞ்சேர்த்ததாவென்று ஐயந்தோன்ற இவ்வதிகரணத்தில் 'சாதி,மட்டே, அதன் பொருள் என்றும் அப்பொதுவாற்றலைக்கொண்டே ஆரியவழக்கும் பொருந்துமாகவே 'ஸம்ஸ்காரம், 'அடைசேர்த்து ஆற்றலைக் குறைத்திடுதல்கூடாது, என்பது சித்தாந்தம் செய்யப்பட்டது.

(1) கோசங்கள் = நிகண்டுகள்.

(2) 'கிருஷ்ணன், என்னுஞ்சொல்கரியநிறத்தைப்பெற்ற பொருளையும் சிவன் என்னும் சொல்லும் 'பரமமங்களனையுங் குறிக்குமாகவே அவைதேவதை என்னும்(வடநூல்வழக்கின்படி) பெண்பாற் சொற்குவிசேடணமாகுங்கால் அதுவும் அப்பால் பெறநேரும் என்பது கருத்து.

வேதங்களிலாவது மற்றைப்பிரமாணங்களிலாவது ஸ்ரீமத்ஆசாரியர்கள் கண்டவழிப் பொதுவழக்கால் சித்திக்கு மாற்றலையொழித்துவிசேடமாய் விளைவைப் பொருளாக்கப் பிரமாணமேதுங் கிடையாவிடினும், ஜைமினிமுனிவர் (1) 'யவவராகாதிகரணத்தில்' நிச்சயித்தவாறு வேதங்களைப் பொருள்படுத்துமிடம் வேறுவிரோதமில்வழி ஆரியர் வழக்கு முக்கியமாய்ப் பிரமாணமாதலின் ஈண்டு பரசிவன், திருமால் இரண்டு பொருள்களிலும் புராணாதிகளில் விநியோகிக்கப்பட்டவிப் புருடனென்னும் சொல்லுக்கு வேதவழக்கு மிருதிபற்றி வைதிக வாக்கியப் பொருளைத் துணிவதே யுசிதமாதலாலெனக.

ஆதலாற்றான் சிவாத்வைத பரமாசாரியஸ்வாமிகள் சிவதத்துவ விவேகத்தில் புருடசப்தத்திற்கு விசேட சக்திஸ்வீகார பட்சத்தையுமொப்பி "புருடனென்பவன சம்பூரணனான சிவன் சத்தியமுதலிய இலக்கணம் பெற்றவன், சாம்பமூர்த்திதரன்; மற்றருத்திரன், அயன், திருமாலனனமாகார்.' எனபதாதி வசனங்களைக்காட்டி அச்சொல் சிவபரமுமாகலா மென்று நாட்டியருளினர்.

ஈண்டுச்சிலர் "புருடனென்பவன், என்று தொடங்கிய வாக்கியம் பிரமன், விண்டு, ருத்திரன் மூவரையுமொழித்துச் சிவனிடத்தில்(2) சாம்பமூர்த்திதரத்துவத்தை விதிக்கின்றதே யன்றிப் புருடத்துவத்தை விதிக்கவில்லை. உலகத்தில் சிவனையே அர்த்தநாரீசனென்று வழங்குதலால் என்று ஆக்ஷேபிக்கின்றனர். அஃது ஆராய்ச்சி முன்னில்லாதும் புருடனென்பவனை பூரணனென்று குறித்தலால் புருடசுத்தத்திற் குறிப்பிடப்படும் சர்வபரிபூரணத்வம் பிர்மலட்சணமென அதை அநுவதித்துப் பரமசிவனிடத்துச் சேர்ப்பது இவ்வசனத்திற்கு இன்றியமையாக் கருத்தெனப் புலப்படுதலாலும் அங்ஙனமே வேதத்தில் 'புருடனன்றோருத்

---

(1) யவவராகாதிகரணம் = இதில் யவம் வராகம் முதலிய சொற்களைப்பற்றி விசாரிக்கப்படுகின்றது. ஆரியர் யவம் என்னும் சொல்லை ஓர் வகைத்தானியத்திலும் வராகம் என்னும் சொல்லை பன்றியிலும் உபயோகிக்கிறார்கள். ஆரியரன்றி மற்றவர் மேற்கண்ட தானியத்திலும் மிருகத்திலும், வேறான மற்றொருவகை தானியத்திலும் மிருகத்திலும் உபயோகிக்கிறார்கள்' ஆகவே இவற்றின் பொருள் யாதென சம்சயம் = பர்ஹிராஜ்யா (வைஷ் ராஜ்யா) திகரணத்தில் ஆரியர் வழக்கை மறுத்து மிலேச்சர் வழக்கே சித்தாந்தமாயமையின் இருக்கும் அங்ஙனமே ஆதல்வேண்டும் என்பது பூர்வபட்சம். வேதவழக்கின்முறை அறிந்தோர் ஆரியராகவே அவர்வழக்கே உண்மையென்றும், பொதுவும் சிறப்புமாய் அநாரிய வாரிய வழக்குகள் அமைந்தவிடத்தே முற்கண்ட ஞாயத்தையெடுத்து ஓதப்பட்டமையால் அதுபொதுசிறப்புப் பொருள் அமைந்த சொல்லின்கண்ணே அமையுமெனவும் பொருள்வேற்றுமையுள்ள மேற்கண்ட சொற்களின்கண் முற்கூறிய பர்ஹிர்ஞாயம் அமையாதென்றும் சித்தாந்தம் நாட்டப்பட்டது.

(2) சாம்பமூர்த்திதரத்துவத்தை = அர்த்தநாரியாகவும் நிற்றலை

திரன், என்று (1)ஏவகாரப் பொருளைக் குறிக்கும் 'அன்றே' வெனும் சொல்லால் ஈண்டு விலக்கப்பட்ட பிரம, விஷ்ணு, ருத்திரர்களை விலக்கியதாலும் என்க. மேலும் 'ஈசன் விருட்சத்தைப்போலசையாது ஆகாசத்திலிருப்பான், ஏகனுமவப் புருடனால் இவையெல்லாம் பரிபூர்ணம்' என்றமுற்செய்யுளில் உலகமை புருடனால் வியாபிக்கப்பட்டதெனக் குறித்து 'விருட்சம்போல் ஸ்தம்பித்து ஆகாயத்துள்ளானொருவன், அவனுலிது வியாபிக்கப்பட்டது புருடனால் சர்வமும்' என்னுஞ் சுருதிவாக்கியத்தை விவரணம்செய்த விபவிர்கரணத்தில் புருடனென்பது சச்சேதனனென்ற விசேட அவாவில் தெரியாதுபற்றி அவ்வாநிலையை நீக்கவெழுந்த விவ்வசனம் அப்புருடச்சொற் பொருளைத் துணிந்தோதலாலன்றி வேறு எவ்வழியும் பயன்பெறுமாறில்லை.

மேலும் ஈண்டு அர்த்தநாரீசத்வத்தை அதுமேவ விதிக்குமாயின், அவ்வீதத்திருவுருவம் சங்காரருத்திரனுக்கு முளதாதலின் அவனை அதினின்றும் விலக்கியோகியதென்னைமேயோ? அம்மட்டோ! பாஞ்சராத்திரம் முதலிய தந்திரங்களில் நாராயணனுக்கும் அர்த்தநாரீசத்வம் சொல்லப்படுதலின் அத்தந்திரத்தைப் பிரமாணமெனக்கொண்ட உமக்கு அந்நாராயணனிடம் அர்த்தநாரீசத்தன்மையை விலக்குதல் கூடுமோ? அன்னமே 'பாதியாற்புருடனுப்' என்ற மநுவாக்கியத்தால் பிரமனுக்கும் அர்த்தநாரீசத்வம் கூறப்படுதலால் அதுபிரமன், விஷ்ணு, ருத்திரன் மூவர்க்குமிருக்க இவ்வசனத்தில் இம்மூவரையும் விலக்கித் துரியசிவனுக்கே விதிக்கப்பட்டதென விவாதிக்க நேர்ந்தற்குக்காரணம் அவர் தம் சித்தாந்தவாராய்ச்சிக் குறைவு மாத்திரமேயல்ல; அகாரணத்தில் உதித்து ஆழ்ந்தசிவதுவேஷமகா ரத்கத் தீப்பயனுமேயாம். இஃதோர் புறங்கிடக்க;

இனி வேதவழக்குமிகுதிபற்றிப்புருடசப்தப் பொருளாராயப்புகின், அவ்வேதங்களில் லவ்விடத்து 'சத்து, தத்து, பரம், பிரமம்' என்பனவாதிசப்தங்களாற்குறிக்கப்பட்ட முக்கட்பிரானிடம் பலவிடங்களிற், புருட சப்தம் விதிக்கப்படுதலானும், மற்றைய தேவதைகளின் பெயராயுபயோகப்படாமையாலும் அப்புருட சப்தத்திற்கு வேதவழக்கு மிகுதிபற்றிப்பொருளாய் அமைந்தது அம்பிகைபாகனே யென்க. வேதங்களில் விசேஷமாய்ப் புருடசப்தம் சிவபரமாகக்காணப்படுதல் எவ்விடத்தென்னில், அவைகளிற் சில காட்டுவோம். (2)'அப்புருடனையறிவாம்' என்பதொன்று; இதிற் புருடனென்னும் சொல்லிருத்தல்போல், கணபதி காயத்திரி முதலியவற்றிலுமிருத்தலால் இதனாற்பயன் யாதெனின், கூறுதும். விஷ்ணு, நரசிம்மன் முதலிய காயத்திரிகளிலிச் சொற்காணப்படாமையானும் பரமசிவன், அவர் பரிவாரமாகிய 'கணேசன், ஸ்கந்தர் நந்தி, கருடன' முதலிய காயத்திரிகளிற்றானே யிப்புருடசப்தமிருத்த

1 ஏவகாரப்பொருளை = தேற்றப்பொருளை

2 அப்புருடனையறிவாமென்பது ருத்திரகாயத்திரியின் முதலடி

லாவிது சிவபிரானுக்கே ஏற்றதெனத் தெளியப்படுமென்க. அற்றேல் கருடனும் சைவனேவெனில் முக்கண்முதலிய சிவசின்னம்பெற்றவனென மந்திரகற்பங்கள் கூறிநிற்றலால் அவனைச்சைவனெனச்சொல்லலாம். ஆகலாற்றான் கருடசயனத்தில் இட்டிகைரூபனான கருடனை ஸ்தோத்தரித்து அவன் சரீரத்தில் அமைக்கப்பட்ட மகாக்னியின் கண்பரசிவப்ரீதிகரப் பூரணாகுதி செய்யப்படுகிறது. இரண்யகர்ப்பர் முதலியோரிடம் உற்பத்திநாசாதி சரீரசின்னந்தோன்றுதலால் அநாதிமல முத்தராய சுப்பிரமணியர், கணேசர், சிவப்பிரசாதத்தாற் சத்திநிபாதமெய்திய 'நந்தி'முதலியமுத்தர் இவர்களினும் வேற்றுமை நன்கு விளங்குதலாலென்க. அங்ஙனமாகப்புருடனென்பது சிவன் பெயராயமைந்தது.

மேல் 'புருடனன்றோ ருத்திரன் சத்துமகான் அவனை' வணங்குவாம் 'ஸஹஸ்ராக்ஷனாகிய புருடனை அறிவாம். மகாதேவனை த்தியானிப்பாம்' என்பனவாதிபல வசனங்களுள. மகான், பிரபு, புருடன் சத்துவத்தை நடத்துவோன் என்பனவாதி வைதிகப்பிரயோகங்களை உற்று நோக்கின் உண்மைபுலப்படும். அற்றேல் 'புருடனன்றோ நாராயணன் விநம்பினான்', என்றவிடத்து வேதம்புருடனென்னும் சொல்லை நாராயணனிடத்தும் உபயோகித்தமையால் இப்புருடசப்தம் நாராயணனைக்குறிப்பதில் தடையாது என்னின் அற்றன்று. புருடனென்னும் சொல் அந்தவிடத்து விசேஷணமாகாது தனது ஆற்றல் கெடாதிருந்தால், நீவிர் கருதிய பயன் கைக்கூடும். அங்ஙனமில்லாது மற்றதற்கு விசேஷணமாய் நிற்றலாலென்க. அங்கு புருடசப்தத்தைப் பூரணனென்னும் பொருளிலாதல் "யான் முன்னேமேயுள்ளிருந்தேன். அதேபுருஷனின் புருடத்துவ" மென்று பங்கயத்தானை நோக்கிப்பத்மநாபன் கூறியதாகவெழுந்த சுருதிவாக்கியத்தால் இரண்யகர்ப்பனுக்கு முன்னிருந்தவனென்னும் பொருளிலாதல் அமைத்து நாராயணன் என்னும் சொல்லுடன் அன்வயிக்கக்கூடும். ஆகலின்மேற்கண்ட பிரயோகம் புருடனென்னும் சொல்லை நாராயணனைப் பரமாக்கவலியற்றொழிந்ததென்க. 'புருடனன்றோ ருத்திர' னென்றவிடத்து "இஃதப்புருடனால் பரிபூரணம்," என்று உபக்கிரமத்தில்தொடங்கியதைத்தழீஇயும் "யாண்டு கன்மவழு, யஞ்ஞத்தின்வழு நேரிடும். ஆண்டு புருடனைச்சிந்தித்துப் புருடசூக்தத்தை உச்சரித்தல் வேண்டும். பூர்ணனாய் நிற்றலாலன்றோ புருடனென்று சொல்லப்படுகிறான்' என்றவாதூல முனிவர் கூற்றைத்தழீஇயும் 'புருடனென்பவன் சம்பூரணனென்று முற்காட்டிய வசனத்தைத் தழீஇயும், பூரணத்தன்மையைக் காரணமாக்கிப் பரமேசுவரனிடத்தில் சேர்த்து(1)

---

1 அநுவர்த்த முகவிதியாய் = அனுவாத முகவிதியென்பதை வருமாறு காண்க. ஆஹிதாக்கினிக்குச் செய்யும் உத்திரகிரியையில் ஜுஹூ, உபப்ருத்து என்னும் இருபாத்திரங்களைக் கீழுமேலுமாக எடுக்கவேண்டுமென விதித்து 'தேவர்களுக்கன்றோ மேலுங் கீழுமாய் எடுப்பது' என்று அநுவதிக்கப்பட்டிருக்கின்றது. இவ்வனுவாத முகத்தால்தான் தேவகாரியங்களில் ஜுஹூ மேல் எடுக்கப்படுகின்

அநுவாத முகவிதியாம் அச்சொல்லுக்கு அவனைப்பொருளாக்குதல் உசிதமென்றறிந்துய்க. பின் மீமாஞ்சகர் கூறும் (1) உத்பித அதிகரண நியாயத்தால் அச்சொல்லைப் பரமேசுவரனுக்கு இடுகுறியாக்கவு மாக்கலாம். மேலே 'பரத்தினும் பரனுய்ப்புரியில் நிகழும் புருடனைக் காண்பான்' என்பதாதி சுருதி வசனங்களைக்கொண்டு சமயத்திற்கேற்ப மற்றைய பொருளையும் அமைக்கக்கூடும்.

மேல் பூர்ணத்வம் பொருளாய்ருத்திரனைப் புருடச்சொல்லுணர்த்த அங்ஙனம்மே புராணங்களுமோதுதலால் அவ்வாறு கொள்ளாதுசரீரத்தில் நிகழ்வானெனும் பொருளைக்கொண்டுபயோகிக்கப்படும் புருடனென்னும் சொல் இலக்குமிபதியை இலச்சாக்கத்தடையேது? 'புருடனெனப்படுஞ் சரீரத்தின் கணிகழ்தலால் அரிபுருடனெனப்படுவான்' என்பதாதிப் பிரமாண வசனிருத்தலாலெனின் அது கூடாது. மேற்காட்டிய வேதோபப்ரம்மணவசனமும் மூலவிருத்தம். வேதம் 'புரிசயம்' என்பதால் பூர் ([illegible]) என வழங்கப்படும் சரீரத்தின் கண் நிகழ்வானெனப்பொருள் கொடுக்கின்றது. இப்புராண வசனம் 'புரு' எனப்படுஞ் சரீரத்தின் கண் நிகழ்பவன் புருடனெனச் சாதிக்கின்றது. வேதவகண்டவழி ([illegible]) என்னும் சொல்லுடன் 'ச' என்னுஞ் சொல்லைச்சேர்த்தால் புருடனென்னுஞ் சொல்லமைகின்றது. புராணவழியில் 'புரு' ([illegible]) என்னுஞ் சொல்லுடன 'ச' (ஶ) என்னுஞ் சொல்லேற புருடனென்றமைகின்றது. ஆகவந்த வசனத்துக்கு இது உபப்பிரமாணமாகாதன்றோ. இனிமேல் எவ்விதமாயினும் 'புருட'னென்னுஞ்சொல்லுக்கு அரியும் பொருளாகின்றதே யென்று விதண்டைபேசின் 'ஸஹஸ்ராக்ஷன்' என்னும் சொல்லிணைடிருத்தலால் இவ்விரண்டு சொற்களும் எப்பொருளிடம் வேதவழக்கில் உடனிகழ்ந்தனவோ அப்பொருளை யீண்டும் பொருளாகவேண்டுமென்பது உசிதமாதலின் புருட சூக்தத்தொடக்கத்தில் 'ஸஹஸ்ராக்ஷ' னென்னும் சொல்லுடனிகழ்ந்த 'புருட'னென்னும் சொல் பரமேசுவரனிடமன்றி மற்றெக்கடவுளிடமும் சேராதென்பது வெளிப்படையாயிற்று.

---

றவதற்கு விசி இவ்வனுவர்த்தமே ஆகின்றது. அதுபோலீண்டு 'புருடனன்றோ ருத்திரன்' என்ற அனுவாதத்தாலருத்திரன் புருடச்சொற்குப் பொருளாகின்றான்.

(1) உத்பித் அதிகரணம் 'உத்பித்தனுல்கேட்க' என்னும் விதியில் உத்பித்தென்பது உலகவழக்கில் மண்வெட்டியைக்குறிக்குமாதலின் மண்வெட்டியைக்கொண்டு வேட்டலெனவரும் அமையுமெனவையம் நிகழ்ந்துழி அப்பொருள் பொருந்தாமையின் அங்கு விதிக்கப்பட்டவேள்விக்கு அவ்வுத்பித்து என்னுஞ்சொல்லை இடுகுறியாக்கியது. அதுபோலீண்டும் 'புருடனன்றோ ருத்திரன் புருடனன்றோ' வென்றவிடத்தும் மனிதன் ஆன்மாவென்ற பொருள்கள் ஒவ்வாவழி அது அவனுக்கு இடுகுறியாய் அமையுமென்க.

புருடனை ‘ஸஹஸ்ராக்ஷனையறிவோம், மகாதேவனைத் தியானிப்போம்’ என்பனவாதி வேதவாக்கியங்களில் மகாதேவனிட மிருசொற்களும் நிகழ்தலாலென்க.

(1) ‘ஸஹஸ்ராக்ஷன் புருட’ னென்னுமிருசொல்லுடனிகழ்ச்சிமட்டி விச்சூக்தத்தைச் சிவபரமாக்குமேல் ‘ஸஹஸ்ரசீர்ஷன், புருடன், ஸஹஸ்ராக்ஷன் ஸஹஸ்ரபாத்’ என நான்கு சொல்லுடனிகழ்ச்சி நாராயணனிடத்திற் காணப்படுதலால், அவனே இச்சூக்தப்பொருளாய் அமைதல்வேண்டும். அங்ஙனமாயின் நாராயணபூஜையில் விநியோகமும் புராணங்களில் விஷ்ணுபரத்வத்தில் இச்சூக்தத்தை விவரணம் செய்ததூஉம் முரணாதொழியும். ஆருணகேதுகத்தில் ‘பூதம்நடக்க’ என்று தொடங்கிய (2 கூர்ம உபதானவிதியின் அர்த்தவாதத்தில் ‘யான்முன்னமேயிங்கிருந்தேன் அதுவே புருடனுக்குப் புருடத்வம்’ என்று கூர்மாவதார சின்னம்பெற்ற ஸ்ரீமந் நாராயணனது திருவாக்கு இரண்ணியகர்ப்பனை நோக்கியெழுந்ததாகக்காட்டி பிறகு (3) ‘ஸஹஸ்ரசீர்டன், புருடன் ஸஹஸ்ராக்ஷன் ஸஹஸ்ரபாத்தாகிக் கிளம்பினா’ னென்று காணப்படுகிறது. ஆகவே இந்நான்கு சொற்களானும் ஒருங்கு சேர்ந்து உணர்த்தப்படும் பொருள் நாராயணனென மேற்காட்டிய சுருதியாற்பெறப்படுதலாலும் இச்சூக்தம் தொடக்கத்திற்றானே அந்நான்கு சொற்களையும் மகுடமாய்ப்பெற்றிருத்தலாலும் நாராயணனே இச்சூக்தத்துக்கு முக்கியப்பொருளாவான் எனில் அற்றன்று. இவ்விடத்து இரண்ணியகர்ப்பனை நோக்கிச் செங்கண்மால் அவனுக்குமுன் நிகழ்வானாதலின் தான் புருடனெனப் புருடச்சொல்லுக்குப் பொருளுரைத்த தன்மையாயினும் இச்சூக்தத்தில் முன் எடுத்தோதிய பலவுபிருகணவசனங்களால் பூரணத் தன்மைபற்றி புருடச்சொல்பெற்ற பொருளே பிரதிபாதிக்கப்படுமெனத் துணியப்படுதலானும் ஆதல்கொண்டே யடுத்தமந்திரத்தில் ‘புருடனே’ சென்றது வருவதெவை யவையெல்லாமென்று காணப்படுதலானும் பரிபூரணனென்னும் பொருளில் புருடபதம் பரமேசுவரனையே குறிக்குமென்பதற்கு ‘சர்வமுமன்றோ இந்தருத்திரன்’ என்னும் வேதவாக்கியம் ‘புருடனன்றோ’ என்றுதொடங்கியதற்குப்பொருளுரைத்தவாறாகிற்றலானும் ‘புருடனேருத்திரன்’ என்று முன் எடுத்தோதிய மந்திரங்கள் கண்டவழி அப்புருடச்சொல்லை வேதம் சிவபரமாக்கிநிற்றலானும் ‘விசுவாதிகன், ருத்திரன், மகரிஷி’ என்னும்மந்திரத்தொடர்புடன் தோன்றிய அவனாலிது பூரணம் புருடனாலெல்லாம் என்ற வசனத்தாலும் பூரணத்வங்கொண்டு புருடத்வம் பெறுவது பரமேசுரனே யென்று ஏற்படுதலாலென்க. மேற்கண்ட சுருதியை வேறுவழிபொருட்படுத்தலும் கூ

---

(1) ஸஹஸ்ராக்ஷன் = ஆயிரங்கண்ணன்.

(2) கூர்ம உபதானம் என்றது கெருடசயனத்தில் உயிருள்ள ஓர் ஆமையைநிலத்தில் மந்திரபூர்வமாய்வைத்தலாம்.

(3) ‘ஆயிரஞ்சென்னியன், புருடன், ஆயிரங்கண்ணன், ஆயிரம்பாதன், என்பன முறையே பொருள்கள்.

டாது. ஈசன் 'விருக்ஷம்போலசைவற்று ஏகனாயாகாயத்திலிருக்கின்றான், அம்மகானுன்மாவாய புருடனால் ஈதெல்லாம் பூரணம்' என்னும் புராணவசனம் அதற்கு உரையிட்டுநிற்றலாலெனக. மேற்காட்டிப்போந்த பலபிரமாணசகித யுக்திவிசேஷங்களால் ஈண்டு 'புருட' னெனவிரிக்கப்பட்டது எம்பிரானேயெனக. புர = புரங்களை (திரிபுரங்களை) உஷதி = கொளுத்துபவன் புருடனென்னும் 'புருஷ:' எனவும்பொருள் காட்டி பூருஷ: என்று வரவேண்டியதை குறுக்கல்விகாரமாயமைத்து முப்புரமெரித்தமுதல்வனிடம் சேர்த்திட வடவியல்வாளேந்திய பண்டிதர் அனேகருளாரென்பது வேறு.

'ஆயிரஞ்சென்னியன்' ஆயிரம் = அளவிலடங்காதசென்னிகளைப்பெற்றுளான்; உலகமெலாம் அவனது திருமேனியாகவே உலகத்துள்ள உயிர்க்கோடிகளின் சென்னிகள் யாவும் அவனதாயுபசரிக்கப்பட்டதென்க. இங்ஙனமே ஆயிரங்கண்ணனாதி யடைசொற்களையும் பொருள்படுத்தவேண்டும்.

'உண்மையில் தேவர்கள் ருத்திரனை யஞ்ஞத்தை விட்டு விலக்கினார்கள். அவர் யஞ்ஞத்தை யழித்தார்' என்று பிரசித்தமாய் வேதத்திற் கொண்டாடப்பட்ட தக்ஷயஞ்ஞசம்ஹாரகாலத்து ஏனைய எழுத்தேவர்களையெல்லாம் புறக்கணித்தோடச்செய்த கோர வீரபத்திரதிவ்விய மூர்த்தியின் கண்ணின்று ஆயிரஞ்சென்னிகளாதிப்பல அற்புதவிலக்கணங்களைக் கண்டு தேவர்கள் மயங்கினார்களென்பது எல்லோருமறிவார்கள். மேலும் 'ஆயிரமாயிரக்கணக்காகப் பூமியின்கண்ணுள்ள ருத்திரக்கூட்டங்கள்' என்னிறந்தபலவாயிரங்கள் திவ்யகணங்கள் பலரூபமெய்தின. ஸ்திரமான அவயவம் அமைந்தபலரூபமுள்ளவன் ருத்திரன் என்றற்றொடக்கத்தனவானபற்பலவசனங்களால் இவ்வுலகத்தைப்பற்பலமூர்த்திகளையதிட்டித்து ஆன்பெருந்தன்மை யெம்பிரானிடத்தேற்றப்பட்டமையானும், பரமரகசியசிவமூர்த்திகளிருபத்தைந்தில் 'அஜைகபாதன்' என்னும் வைதிகதிவ்யமூர்த்தியுஞ்சேர்ந்ததாதலால் ஒருகாலுக்கொருதலையாக ஆயிரத்துக்காயிரங்காலென்று குறித்தலும் அமையுமெனக. அங்ஙனமஹாபாரதம்சௌத்திகபர்வம், கூர்மபுராணமுதலியபலவிடங்களில் எடுத்தோதத்தப்பெற்ற பரசிவ விபூதிகளனைகள் பிரமன்முகத்தவதரித்தஎம்பிரான் பிரதிபிம்பங்களெனக் குறிக்கப்பட்டமையானும், அப்பரமனதுபிரதிபிம்பருத்திரமூர்த்திகளில், ஏகாட்சருத்திரமுகூர்த்தமும் உளதாதலின் இவ்விடத்தேயாயிரஞ்சென்னி, ஆயிரங்கண், ஆயிரங்காலென்பன திவ்யலட்சணங்களாய் முடிந்தன. இம்மட்டோ! இவ்வாயிரங்கண்ணனென்னும் பெயரைக்கண்ணுதல் வள்ளல் பெயர்களுடன்கலந்தோதும்வழக்கம் வேதங்களிற்பலவிடங்களிலுளது. எங்ஙனெனில் "புருடனைப்பணிவோம். ஸகஸ்ராட்சனுமாகிய மஹாதேவனைத் தியானிப்போம். நீலக்கிரீவன் ஸகஸ்ராட்சனுக்கு வணக்கம். ஆயிரந்தூணிகொண்ட ஆயிரங்கண்ணனே! உனது வில்லையொழித்து" என்பனவாதிபல. மேல்இந்த மந்திரங்கள் சுவேதாசுவதரசாகையைச் சேர்ந்த மந்திரோபநிடதத்திலும் படிக்கப்படுகின்றன. அவ்விடத்தில்

'எங்கும் சிரமும், கண்டமும் பெற்றவன், எல்லாபூதத்திதயத்துமுள்ளான், சர்வவியாபி, பகவானாதலின் எங்கு நிறைந்தவனேகசிவனே' யென்று துணிவுரை கூறிய மந்திரங் காணப்படுதலால் முன்பின் முரணாதபடி வேறுபொருட்படுத்த முடியாது. அதன் துணிபு அச்சுவேதாசுவதர உபநிடத்துக்கு யாம் இயற்றும் பாஷியத்திற் கண்டுகளிக்க. இனி இந்திரனுக்கு ஆயிரங்கண்ணனென்பது இடுகுறிப் பெயராக விருத்தலால்அவன் அதன் பொருளாயமையானோ வெனில் பிரகிருதமானபரமகாரணவஸ்துவின் கண் உபயோகிக்கப்பட்ட இச்சொல்லை இவ்விழிதேவர்களிடத்து உபயோகப்படுத்த எந்தவைதிகனும் இணங்கான். 'அவன்' முற்கூறிய இலக்கணமமைந்த பரமான்மா 'உலகை' காண்பொருளனைத்தையும், ஈண்டு உலகையென்று குறித்தது ஏகதேசக்குறி வழியாமென்க. 'விசுவத்துவியாபித்து'எங்கும்வியாபித்து உலகத்துக்குபாதானம்பிரமமேயாதலின் ஆடையில்நூல்வியாபித்துநின்றதுபோல் உலகத்தில்கடவுள்வியாபித்து நிற்கின்றானென்பதுகருத்து. எள்ளுக்குள் எண்ணைபோலென்பதுமதாந்தரம். 'விசுவத்து, மேற்குறிக்கப்போகும் விராட்ரூபத்தையதிட்டித்து அல்லதுவிராட்ரூபனாகி அல்லதுவிசுவனெனவழங்கப்படும் நாராயணனையதிட்டித்து அல்லது அவன்ரூபனாகி 'யெங்கும்வியாபித்து,என்பதுபொருள். ஆதலாற்றான் 'உள்ளும்புறம்பும் இவ்வுலகத்தை வியாபித்துநின்றான்நாராயண,னென்று மஹோபநிடதங் கூறுகின்றது. ஈண்டு 'விசுவ'மென்னும் பதம் விண்டுவையே குறிக்கும். 'விசுவன், நாராயணன், பரன், என்னும் நிகமத்தானும்,விசுவம்,விஷ்ணு, என்னும் பாரத வசனத்தானும் என்க.

அற்றேல் 'விசுவம், என்று உலகத்தை யெடுத்து அஃது 'நாராயண,னென அதனிடத்து நாராயணதாதாத்மியத்தை விதித்தல்மேற்கண்ட சுருதியின் பொருளாகாதோ வெனின், அற்றன்று. 'இவ்வுலகத்தில் காண்பதெல்லாம், என்றுதொடங்கிய மேல் வசனத்தால் இதேபொருள் குறிக்கப்படுதலின், கூறியது கூறலென்னுங் குற்றம்வாராவழிமுற்கூறிய பொருள்கொடலே யுசிதமாதலாலென்க. இதன் விரிவு மற்றோரிடத்திற் காணலாம். 'அதன்மேல் ஈரைந்தங்குலமிருந்தனன், இதனால் காண்பொருள், காட்சி, காண்பான், என்னும் திரிபுடி நீங்கிய விடத்து முத்தியென்னும் சொரூபானந்தம் நிலைபெற்று நிற்குமாகவே அவித்தியாமயபிரபஞ்சத்தை அவன் திருவருள் வியாபித்த தென்றது. 'ஈரைந்தங்குல மென்று, அளவுகாட்டியது முற்பகுதியில் 'ஆயிரம், என்றதுபோல் உபலக்கணச்சொல்லாகவேயமைந்தது. ஆதலினிவ்விருக்கின் பொருள் இது.

ஆயிரம் சென்னியன் = அளவிலாச் சென்னியன் அல்லது வீரபத்திராதித்திருவுருவங்களில் அமைந்த ஆயிரம் சிரசுகளுள்ளவன். ஆயிரம்கண்ணன் = அளவிலாக்கண்களுடையவன் அல்லது ஒரு திருமுகத்துக்கு ஒருகண்ணாக ஆயிரங்கண்களுடையான், அல்லது உலகத்திற் காணாத நுதற் கண்ணுயிர முடையான் அல்லது கண்ணென்னும், சொல்புலன்களைக் குறிக்குமாதலால் புலன்களை நடத்துவோன் 'ஸ்திரங்களான பல அங்கங்களால் பற்பல ரூபங்களைப் பெற்றவன் உக்கிரன், 'என்

னும் வேதத்தால் என்க. ஆயிரம் பாதன் = அளவிலாப்பாதமுடையான், மூர்த்திக்கு ஒருபாதமுள்ளானதலால் ஆயிரம்பாதனென்றது. அல்லது ஆயிரக்கணக்கான ருத்திரர்களால் வழிபடப்படுபவன் (வழி) என்னும்வினை (உ) என்னு மிடைச்சொல்லோடுகூடி வழிபாட்டைக் குறிக்குமென்க; அல்லது ஆயிரக்கணக்கான 'அண்டங்களினிற்பவன். ஆயிரம்பாதன் அல்லது அளவற்ற உபநிடதங்களால் பிரதிபாதிக்கப்படுபவன். புருடன் = பூரணனாகிய பரமேசுவரன் (மேற்கண்ட இலக்கண முடைய எவனென) வருவித்து அப்பரமேசுவரன 'உலகை, யென்பதாதிவினைக் கூட்டி முடிக்க.

முதன் மந்திரம்

முற்றிற்று

---

௨

## புருடசூக்தம்

இரண்டாம் மந்திரம்

—— (௦) ——

இனி 'முதல்மந்திரத்தில் சச்சிதாநந்தஞானபரப்பிரமத்திடத்து(க) அத்தியாஸம்' செய்யப்பட்ட இப்பிரபஞ்சத்தையே அவனுக்குச் சரீரமாகக் கற்பித்து இதற்கு (உ) அத்யாரோபாபவாத நியாயத்தால மேல்'இங்ஙனமுலகைக் கற்பித்தனரே, என்று சமஸ்த பிரபஞ்சங்களும் அப்புருடனிடத்தில் கற்பிதமென்று குறித்து, உலகெலாமெழிந்த உண்மைப்பொருளை அபரோட்சமாயறிதலே முத்திக்குபாயமென்று 'அவனிவன்றன்னை யறிந்தவன்றானே அமிர்தனிங்காவானன்றே (யரிய), என த்துணிந்தோதி அப்பேரறிவில்லாப் பேதையர்க்கு 'வீடுகூடலுற்றேறிலமே' யெனா வீட்டின் பேற்றையும் விலக்கப்போகின்றார். இவற்றுள் (ந) அதிஷ்டான சத்தையைக்கொண்டு (ரு) உள்பொருள் போலத் தோனறுமுலகம், இப்பியில வெள்ளிபோல 'போலிப்பொருள்களாகவே, அது பரவஸ்துவைக் கலந்து நிற்றலெப்படி? அது சரீரமாயின் அதுகொண்டு 'ஆயிரஞ்சென்னியன், முதலிய சரீரதர்மங்களைப் பரத்தினிடத் தேற்றலாம்; அன்றிக் கடவுளால் வியாபிக்கப்பட்ட தென்றுவது முயற்கோடு போன்ற இப்பிரபஞ்சத்தை விசுவன் வழிவியாபித்துளன்றுவது எடுத்தோதலாம், என்று ஆசங்கை நிகழ்ந்துழி 'எங்குங் கண்ணுளான், எங்குமுகமுளான், எங்குங் கைகளுளான், எங்குங்காலுளான் அவனால் இது பூதமெல்லாம் புரப்படுமெல்லாம்' என்று தொடக்கத்தனவான அநந்த சுருதிகளில், இவ்வுலகை நிறுமாதலின அவ்வாசங்கையை இவ்விரண்டாவது மந்திரத்தால் ஒழிக்கருளுகின்றார்.

"புருடனே, சென்றதுவருவதுவையவையெல்லாம்
அமிர்தத்தன்மையதோனன்னே
அன்னத்தவனே காரந்தெளிர்கின்றான்"

என்று, எது 'சென்றது, எது 'வருவது' என்பது நிகழ்வதையுங்குறிக்கின்றது 'சென்றதுவருவது நடப்பதற்கீசன் என்பதாதி வசனங்களில், முக்காலநிகழ்ச்சி யுணர்த்தப்படுதலாலெனக. இங்ஙனம் முக்காலத்துள்ளதும் சத்துமெனப் புலப்படும் பொருள்கள். எல்லாம் = அவயவமுள்ளன. புருடனே = பூர்ணனாகிய ப்ரம்மமே 'எல்லாம் பிறந்தது புவனம் சித்திரம், இறந்தது பிறப்பது எது எலாம் இருத்திரனே' என்னுஞ் சுருதிவசனம் இப்பொருள் கொண்டே முடிந்தது எனக. மண்ணினிடங் கற்பிக்கப்பட்டு அதனுண்மையைக் கொண்டு தனதுண்மையைத் தரிக்கும் குடமாதி பொருள்கள், மண்ணின்றித் தனித்து நில்லாது. மண்ணெனனும் காரணப்பொருள் காரியத்தன்மையாய் குடத்தன்மையன்றியும் காணப்படும். அதுபோல் பரப்ரம்மமும் தம்மிடத்தாரோபிக்கப்பட்டு (1) விவர்த்தகாரியமாய்த் தோன்று மிவ்வுலகத்தின் வேறாச் சிற்கன சுயப்பிரகாச வடிவமாய் நிற்குமாயினும், அநாதிமயக்க ஆட்சியிலாழ்ந்த ஆன்மாக்களாய (2) பத்தர்களுக்கு உலகமாகவும் தோன்றும். நுண்ணறிவில்லாதானுக்கு மண்ணும் குடமும் வேறாகத் தோன்றுவது போல, உலகத்தில் பேதஞானமும் உண்டாவது கூடும். பற்பல ஜன்மங்களிற் செய்த புண்ணிய பரிபாகத்தால் சித்தசுத்தி பெற்ற முமுட்சுவினது புலன்கள் பிராரப்த மிருதிவரையிலிருப்பினும் வெந்த ஆடைபோல் அமைப்பின்மட்டும் தோன்றிக்காரியப்பயோகமின்றி நிற்றலால் அவனுக்கு இவ்வுலகம் பிரமவிவர்த்தமாகவே தோன்றுவதன்றி மற்றையாகாதென்று அவனை நோக்கிக் கூறியது இஃதெனறறிக. அதுகொண்டே 'மரத்தில் ஆனையும் ஆனையின் மரமும் மறைவது போல், உலகத்தில் ஆன்மாவும் ஆன்மாவின் உலகும் மறைய' 'மென்றனர் சான்றோர். அங்ஙனம் 'கண்டுங்காணாது நிற்பான் யோகி' யென்றும் (3) 'உலகெலாம் மயங்குமிடம் யோகி விழித்திருப்பான்; உலகம் விழிக்குமிடம் யோகிக்கு இருளாய்த் தோன்றும்' என்பதாதி வசனங்கள் எழுந்தனவெனக. 'எங்கு இவனுக்கு எல்லாம் ஆன்மாவாகும் அங்கு எதனால் எதைக்காண்பான், அஃது பெருமை' என்பதாதி பல சுருதிகளால் வெளிவந்தவாறு அவ்விடமதை ஒழிந்த க்ஷணத்தே பிரகாசித்து பிரபஞ்சம் நீங்கப்பெற்ற நித்திய நிர்மலச்சச்சிதானந்த சுத்த பிரம

---

1 விவர்த்தகார்யம் = இப்பியில் வெள்ளிபோல அதிட்டானம்விகாரப்படாது பரிணமித்தல்.

2 பத்தர்கள் = மலத்தில் கட்டுண்ட ஆன்மாக்கள்.

3 உலகெலாம் மயங்குமிடம் உலகத்தவர் வெளிப்படையாய்க் காணும் பிரமத்தைக் குறித்தது. யோகிவிழித்திருப்பான் என்றது அதை யோகி காண்பானெனப் பொருள் கொடுக்கும். உலகம் விழிக்குமிடம் என்பது காண்பொருளாய பிரபஞ்சத்தைக் குறித்தது. யோகிக்கு இருளாய்த்தோற்றுமென்பது ஸ்வாநுபூதிக்குத்தோன்றாதெனப்பொருள் கொடுக்கும்.

சொரூபமே முக்தியாதலால் அஃதீண்டு 'அமிர்தத்தன்மை' என்னும் சொல்லால் கூறப்பட்டது. அஃது ப்ரம்ம ரூபமாதல் பற்றியும் (1) தமது சத்தையிற்றும சுதந்திரமாவது இன்றியமையாததாகவே சுத்தபிரமசொரூப முக்திக்குப்பிரமமேசுதந்திர மெனக் கூறுகின்றார். அமிர்தத்தன்மைய தீசானனே, என்று 'எதைச் செபித்தால் அமிர்தத்துவத்தைப் பெறுவான் உபதேசித்தருள்வாய்' என்று சிஷ்யர் வினாநிகழ்த்தி 'ருத்திரசங்கிதையால் அஃது அமிர்தனது திருநாமம் அடங்கியதன்றோ' என்று குருவாக்கியத்தை ஜாபாலோபநிடதம் வகுத்தலாலும், ஸ்ரீருத்திர சங்கிதை சிவநாம பரிபூரண மென்பது எவராலும் மறுக்கவொண்ணாத உண்மையாதலானும்' ஹிரண்யபாகு ஹிரண்யபதி 'ஹிரண்யருபனை வீடுபெறவழிபடுக' என்பதாதி பல சுருதிகளில் ஹிரண்மய னெனக்குறிப்பிடப்பட்ட பிறைசூடிப்பிரானை ஹிரண்மயனென எடுத்து அநுவதித்து 'அமிர்தன் ஹிரண்மயன்' என்று அவனை அமிர்தபதப் பொருளாக்கிச் சுருதி கூறுதலானும் அங்ஙனம் 'இவனுனதான்மா, அந்தர்யாமி, அமிர்தன்' என்பதாதி வாக்கியங்களிலும், வேறே எக்கடவுளர்க்கும் கிட்டா அஷ்டமூர்த்தித்தன்மை பெறுத்து அவ்வமிர்தபதப் பொருளிடத்து, அந்தர்யாமிபிராம்மணம் 'எவன் நிலத்தினின்று' என்று தொடங்கி 'எவன் ஆன்மாவினின்று' என்றதுவரை துணிந்து ஓதுதலானும் அமிர்தம் என்னும் சொல் சுத்த பரமசிவ திவ்விய சொரூபத்துக்குக்காரண இடுகுறிப் பெயர் ஆதலாலும் உபாதியில்லாத திவ்விய சொரூபத்தை முத்தியெனல் பொருந்துமாதலாலும் அந்தமுத்தியே ஈண்டு அமிதத்தன்மை என்றது.

அமிர்தத்தன்மையது = சிவத்வ அபிவியக்தி ரூபமான முக்தியினது அல்லது ஆன்மாவிடத்து அசி னெனும் மயக்கம் ஒழிந்தவுடன் பிரகாசிக்கும் அநாதிசுயம் பிரகாச சிவஸ்வரூப மெனப்படும் முத்திக்காவது ஈசானன் = நாதன் பரம்பொருளாய பரசிவன் இனி 'எதனாலவனை ஈசானனென்பர்? எவன்உலகெலாம் தன்பரமசக்திக் குட்படுத்தியாளுவன்' ஏ சூர கறவையில்லாமடுப்போன்றயாம் தோத்ரம். ஜங்கமங்களான இவ்வுலகத்துக்கு நாதனான ஈசானன்; மோக்ஷத்துக்கு வழிகாட்டும், பரமேசுவரர்முதல் உன்னை இடைவிடாதுசரணடைந்து, இடைவிடாது ஸ்தோத்திரம் செய்கிறோம். ஆதலால் அவன் 'ஈசானனெனப்படுவான்' என்று அதர்வசிரோபநிடதம் கூறுதலானும் 'ஆதலால் ஈசானன், மகாதேவன்' என்று மகோபநிடதம் வற்புறுத்தினமையானும், அவனன்றோ ஆன்மா, ஈசானன், சம்பு, பவன், ருத்திரன், என்று மைத்திராயணோபநிடதம்கூறுதலானும் இன்னும் அநேகபிராம்மணங்களானும் ஈசானனென்னும் சொல் எமது ஈசனையே குறிக்குமென்க.

---

1 தமது சத்தை = தம் உண்மை.

அற்றேல் 'ஈசான னென்னும் சொல்'இடுகுறியாற்றலால் இங்குள ப்பொருளையும் குறிக்காது. அதனிடுகுறியாற்றலைத் தொலைத்துக்கார ணவாற்றலைவிளக்கிட அமிர்தத்தினது என்று எதிர்மறைப்பொருளைக்கூ றும் சொல்லிருத்தலால் அதனுடன் பொருட்பொருந்தும் வழி இங்கு அ மிர்தத்தினது நாயகனென்றே காரணப் பெயராய்க் கொள்ளவேண்டிய தே யன்றி முற்கூறியவாறு இடுகுறிப்பெயராய் 'ருத்திரன்' என்றுபொ ருள் கூறல் அமையாது. அங்ஙனம் கொள்ளின் 'குடங்களைப் படைத்த வன் கோளங்களுக்கு ஈசுவரன்' என்பதாதி வாக்கியங்களில் 'பிரம்ம தேவன் 'ருத்திரன்' இவர்கள் 'படைத்தவன்ஈசுவரன்' என்னுஞ்சொற்க ளுக்கு விபரீதப்பொருளாகவேரிடும். ஆயின் முற்கூறியதுஎங்ஙனம் பொ ருந்துமெனிற் கூறுதும்.

'எவ்விடத்தும் எதிர்மறைப்பொருளைக் குறிக்கும் [சொல்லொன்று, நிகழும் அதனுடன் பொருந்துமற்றைய சொல், தமது இடுகுறிப்பொ ருளையுணர்த்து மாற்றலை இழந்து விடு'மென்று எவ்வரசரிட்ட ஆணையும் இல்லை. அங்ஙனம் அந்நூலாசிரியரும் எடுத்து வகுத்தாருமில்லை. அவ் விதநியமம் இல்லாமையாற்றான் வியாகரணமகாபாடியம் வகுத்தருளி ய ஆசிரியர் பதஞ்சலியார் 'பிரதிபதோக்த சப்தங்களினது சப்தபாராய ணத்தைக் கூறினர்' என்றனர். இசனுரை யாசிரியர் கையடனார் 'சத்த பாராயணமென்பது ஓர் நூலுக்கு இடுகுறிப்பெயர்' என்றனர். இங்கு 'சப்தங்களினது' என்ற ஆறும்வேற்றுமையின் பொருளாகிய சமபந்தம் 'சப்தபாராயண மென்னும் சொல்லின் ஏகதேசகாரரைப்பொருளாகிய பாராயணத்தில் சேர்கின்றது. அதனால் அதனிடுகுறியாற்றல் கேட்ட தில்லை. அங்ஙனமே 'வேதங்களினது வேதம்' என்னும் சாந்தோக்கிய வசனத்தில் 'வேதம்' என்னும் சொல்" அறியும்கருவியெனப் பொருள்கொ டுத்து 'வேதங்களினது என்ற! ஆறும் வேற்றுமை ஈற்றுச்சொல்லோடு பு ணருமென்றும்; வேதங்களின் பொருளை அறியும் கருவியாய வியாகர ணத்துக்கு வேத மென்கிற இடுகுறிப் பெயரு முண்டென்றும் வடவிய ல் பயின்றவான்றோருட்[சிறந்த] ஆசிரியர் நாகேசபட்டனார் சப்தேந்து சேகரத்தில் எழுதினர். அங்ஙனமே பிறரும (1) 'உனதுவாரணத்தை திருவருட் சங்கிலியாற்கட்டு' என்னும் (2) 'யானபராத சக்ரவர்த்தி என்னும் பிரயோகித்திருக்கின்றாகள். ஆதலால் மேற்கண்ட பிறர்

(1) உனதுவாரணத்தை = ஈண்டு வாரணமென்பது ஆனையையும் தடுக்கும் கருவியையும் குறித்து தடுக்குங்கருவி யென்பதை உனது என் னும் சொல்லில் பொருந்த ஆனையென்னும்பொருள் தன்னிடம் அமைய ப்பெற்றது.

(2) அபராதசக்கிரவர்த்தி = ஈண்டுசக்கிரவர்த்தியென்னும் சொல் படையைநடத்துபவன். போசன் என்று இருபொருளைக்காட்டி முற் பொருளில் முன்பதம் பொருந்த பினபொருளைத் தன்னதாய்ப்பெற்றது. இவ்விருசொற்களும் பாஞ்சராத்திரிகளுக்கு ஆசிரியரான வெங்கடநா தகவியெழுதிய தயாசதகத்துள்ளது.

கூறிய ஞாயம் தம்மாலும் பயனற்றொழிந்ததைத் தாமேகண்டு அடங்குவாராக. (3) குடங்களைப் படைத்தவன் என்பனவற்றுள் இரண்டாவதாய இடுகுறிப் பொருள் கொள்வதிற் பயன் யாதுமில்லையாதலால் அப்பொருளும் அங்கு தோன்றுவதில்லையென்க. இதன்விரிவு 'சத்தத்தாலன்றோ அளக்கப்பட்டவ' னென்னும் சூத்திரத்தையும் 'இறந்தது வருவது எல்லாவற்றிற்கும் ஈசானனை' என்னும் மந்திரத்தையும் விசாரித்தருளிய சிவாத்வைத வித்தியாசாரியஸ்வாமிகள் சிவதத்துவவிவேகத்தில் நிரூபித்திருக்கின்றாராதலால் ஆண்டுகண்டுணர்க.

'அன்னத்தவனேகரந்தொளிர்கின்றான்' என்பதே காரணாவஸ்தையைமறைத்து காரியாவஸ்தையைப் பெற்றதுபோல் மயக்கவரிவிற்கு விஷயமாதலே* முற்பகுதியிற் கூறியதற்கு ஏதுவென்க. 'அன்னத்து' அன்னத்தினால், ஈங்கு அன்னமென்னும் பதம் ஜீவகன்மங்களுக்கேற்றவாறமைக்கப்படும். தனுகரணாதிகளைக் குறிப்பதால் ஆகுபெயர். 'கரந்தொளிர்கின்றான்' விவர்த்தகாரியமாய்த் தோன்றுகின்றான். உற்றுநோக்கின் ஏதும்விகாரமின்றி மாறியதுபோலத் தோன்றுவதே விவர்த்தமாதலாலென்க. அங்ஙனம் காரியமூர்த்தியாய்த்தோன்றுதலாற்றான் 'சென்றது' 'வருவது, என அது வழங்கப்பட்டதெனக் கொண்டு முன்னடியோடுசேர்த்து பொருள் முடிபுசெய்க.

சென்ற இரண்டு மந்திரங்களிற் கிடைத்தபொருள்களெல்லாம், மந்திரோடநிடதத்தின் மூன்றாவதத்தியாயத்துள் மேற்கண்ட மந்திரங்களை அவ்வாறே படித்து, பிறகு இப்புருட சூக்தப்பொருளை ஈசானனெனத் துணிந்தோத எழுந்த 'எங்கும் கைகாலுளது, எங்கும் தலைகண்ணுளது, எங்கும செவியுளது, இவ்வுலகத்தை வியாபித்தது. எல்லாப் புலன்களின் குணத்தை விளக்குவது, எல்லாப் புலன்களுக்கும் அகப்படாதது, எல்லாவற்றிற்கும் பிரபு, ஈசானனே, 'அவன் எவ்வுயிர்க்கும் உற்றதுணை, எனகிற இருமந்திரஙகளால் விளக்கப்பட்டன.

'ஈசானன்னே, என்ற விடம்தேற்றப் பொருள் கொடுக்கும் சொல்லாலியல்பில் அவன் அமிர்தத் தன்மையது ஈசானன் என்றும், பிரபஞ்சம் அவனிடத்துக் கற்பிதம் என்றும் பெறப்பட்டது. அமிர்தத்தன்மை யென்பதுபிரபஞ்ச மொழிந்த சுத்த சிவஸ்வரூபமான முத்தியைக் குறித்தது. 'ஈசானன், மேற்கண்ட முத்தியாய சிவஸ்வரூபத்தை விளக்குவதிற் சுதந்திரரான பரசிவன் 'இவ்வான்மா பிரவசனத்தாலாதல் மேதையாலாதல் பன்னூற்பயிற்சியாதல் அறியப்படுவானன்று. எவனையவன் அருள்வழியாக்குவானோ அவனுக்கே யவன் தன்னியல் விளக்குவான், என்று சுருதி கூறுதலாலென்க. எக்காரணம்பற்றி 'அன்னத்து, ஜீவபோக்கியமான வஸ்துககளில் கரந்தொளிர்கின்றான், அக்காரணத்தாற்றான் செ

(3) 'படைத்தவன்' இச்சொல்லுக்கு ஒருபொருளை ஆத்கியோனும் பிரமதேவனும் பொருள்.

ன்றது வருவதுஎன்பதாதி வழக்குக்கிடமாகின்றான். உற்றுநோக்கின் 'அவனேயுளான் அவனிலும் வேறு அணுவேனுமில்லை; எங்கும் நிறைந்தவனேக (1) நாயகனே, என்றது இம்மந்திரப் பொருளாம்.

இரண்டாமந்திரம்

முற்றிற்று

———

## மூன்றாமத்தியாயம்

—— (೦) ——

இனிமேற்கூறிய இயல்பொருந்திய பரமான்மாவினது பெருமையை வேறுவழியால் அவனது விபூதிகளைப்புகழ்ந்து மூன்றாம் மந்திரத்தால் தெற்புறுத்துகின்றார்.

இன்னவையெல்லாமிவனதுமகிமை
அதனின்மேலும்புருடனுளனும்
எப்பூதங்களுமிவனதுபாதம்
மூப்பதனமுதம்வானகத்ம தாளிமே.

என்று இவனது புருடனென பெயரிட்டழைக்கப்பட்ட பரிபூரண பரசிவனது மகிமை விபூதி மகத்தென்னும் தன்மை பரசிவனது சிறப்பிலக்கணமென 'எவ்வுருவத்தையு மடியந்தள நீரன்' என்னும் மந்திரப் பொருள் கூறுமிடத்து விரித்திடுவோம். முற்கூறியபடி காண்பொருள் அனைத்துமான அப்புருடன் 'அதன் மேலும் உளனும் இக்காண் பொருள்கள் தோன்றும் அளவே நின்றவனல்ல, அதனினப்புறததும் நின்றனவென்பது கருத்து. ஈண்டுமேலென்றது, மேல் என்பதி னெதிர்மறையல்ல; எவ்வித அளவைக்கும் அடங்கா அப்பொருளையோ ரளவைக்கிலக் காக்குதல் கூடாமையெனென்க. மற்றுமேல் என்றது காண்பொருள்களைப்போல் ஓர் அளவைக்கடங்காதவனென்று பொருள்படும். இனி அப்பொருளையே வழிபடுவோர் சௌகரியத்திற்காக 'எப்பூதங்களும' என்றுவிசேடிக்கிறார். 'எப்பூதங்களும் இவனதுபாதம்' எல்லாப்பூதங்களும் இவனது அம்சமென மற்றொரு ஸ்மிருதி கூறுதலால் (2)பாதம் என்பது அம்சமெனப்பொருள் தருவதுமன்றி, ஓர் அளவைக்குறிக்கும சொல்லல்ல. முப்பதம் காண்பொருளிலுள்ள அம்சத்தினும் அதிக அம்சம் உள்ளான் வியாபகனென்பது கருத்து. (3) 'எள்ளுக்குள் எண்ணெ

---

1 முற்பகுதியில திச்செய்யுளின்முதல் இரண்டுபகுதிகளானவை புருடனே சென்றது வருவதெவையவை யெல்லாம் யென்றவிடத்து.

(2) பாதம் = இஃது நான்கில் ஒருபங்கைக்குறிக்கும் அதே இவ்விடத்துவிலக்கப்பட்டது.

(3) எள்ளுக்குள் எண்ணெய் பிரவாகத்தில்நீர் = என்றது வேறுசித்தாந்தித்து முக்கிய திருஷ்டாந்தம்

ய், தயிரில் நெய், பிரவாகத்தில்நீர், அரணியிலக்கினி என்றும் (1) 'விசுவாதிகன் ருத்திரன், மகரிஷி' என்றும் பலசுருதிகள் அங்ஙனமே விளக்குதலாலெனக. ஈண்டுமூன்றென்றும் எண் அதிகத்தையாதல் இவ்வுலகமாய்த் தோன்றும் அம்சத்தினும் வேறாய அம்சத்தையாதல் குறிக்குமென்று கொள்க. 'அமுதம்' நித்தியமுந்துன்பமற்றதும், ஆனந்த நிறைவுமானஸ்வரூபம் 'வானகத்து' சிதாகாசத்தில. ஈண்டுவானகமென்றது பூதாகாசத்தையல்ல 'ஆகாசத்திலுள்ளான் இப்புருடன்' 'சர்வைசுவரிய சம்பன்னன், சர்வேசுவரன், சம்பு, ஆகாயத்தினடுவில்' என்பதாதி சுருதிகளாலெனக.

அச்சிதாகாசம் பெத்தர்களுக்குப்புலப்படாது. கோபமற்று பிரம்ம சாக்ஷாத்காரலாபகம் பெற்ற அந்தணரதை ஆகாயத்தின்கண் கண்டு பெருமையெய்துவர் என்றும் பலவிடங்களில் சிதாகாசம் அவ்வமுதனுக்கு இடமாகக்கூறப்பட்டுள்ளது. அதுகொண்டே 'ஆகமங்களையறிந்த ஆன்றோர் பூரண ஆற்றலுடைய வெப்பரமனது அம்சாம் சத்தி இவ்வுலகமைந்துள்ளதெனக்கூறுவர் என்றுரைத்தனர் ஆன்றோர் 'ஆகாயசரீரம் பிரம்ம' மென்றும் வேதங்கள் ஒலிக்கின்றன. 'ஆகாயம் அதனைலிங்கத்தா' லெனபிரம ருத்திரர்களாரும் பரமேசுரனையே ஆகாயமென்க குறித்தனர். பிரமவித்தையாகிய உமாதேவியு மங்கே அமைந்துள்ளாளெனக் குறித்தற்கே 'அவ்வாகாயத்தில் ஹைமவதியாகிய உமாதேவியை வெகுகாந்தியுடனமைந்த பெண்ணுருவமாகக் கண்டார்.' என்றுகேநோபநிடதங்கூறுநின்றன. ஈண்டு 'மூப்பதன்', 'அமுதம்,' என்றவிருசொற்கள் அநேகம் பொருள்களை அடக்கி நின்ற வழிகாட்டுகின்றன. எங்ஙனமெனில்'மூப்பதன்' ஜாக்கிரமுதலிய மூன்றவத்தைகளிலும் உள்ளான், (அவனது) 'அமுதம்' அம்மூவவத்தைகளையுங்கடந்து அவைகளுக்கபிமானியாகிய விசுவன், தைஜஸன், பிராஞ்ஞனெனப்படும் மூவர்க்கும் வேறாய் ஆராய்ந்திட 'அக'மெனத் தனித்தொளிரும் பொருளாய் அஜபாஹம்ஸ மகாமந்திரவுட்கருத்தாய் விளங்கும் ஸ்வரூபம். 'வானகத்து' முற்கூறிய அவத்தைகளைக்கடந்து துரியாதீத அவத்தைகளில்; துரிய துரியாதீதங்களையவத்தைகளெனக்கூறியது ஜாக்கிராதிகளை நோக்கியேயன்றி உண்மையில் அவை அவத்தைகளாகா; அவைகளின் ஸ்வரூபம் துணிந்தோதப்படக்கூடாமையாலெனக. அல்லது 'மூப்பதன்' அதிபூதத்தில் ஒரு வெள்ளிய பக்ஷி. இமையமலையாகிய முவிடத்துள்ளானவனது 'அமுதம்' திரியம்பக மந்திரத்தில் அதியாரடையும்பொருளாய்க்குறிக்கப்பட்டதும் அமிர்தமிருத்தியுஞ்சய மகாமந்திரத்தில் அமிர்தமெனப் புகழ்பெற்றதுமான திவ்வியரூபம் 'வானகத்து

(1) விசுவாதிகன் = உலகத்துக்கு மேலானவன மேலகண்டத்துள்ளார்க்குள் என்னும் மந்திரம் காண்பொருள்களனைத்தும் கடவுள் வியாப்தியைக்குறித்தலானும் இச்சுருதி அவன் உலகத்தினும் மேலெனக் குறித்தலானும் இவ்விரண்டும் இம்மந்திரத்துக்கு பெற்றோர் யினவெனக.

பரமாகாசமெனக்கூறப்படும், உன்மனையீறாக எல்லாப்புவனங்கடந்த பரசிவலோகமென வழங்கப்படும் ஸ்ரீகைலாசத்துளது. ஈண்டு பிரமாணம் உமையொருபங்கும், மூன்றுகண்களும்சந்திரகலையும் கரியகண்டமும், பரமானந்தத்தாண்டவமும், பரமனிலக்கணம் உமார்த்த விக்கிரகன் வரதன் சர்வகாரணகாரணன், என்பதாதி புராணஸ்மிருத்தியாதி வசனங்களால் சிவபரமென நாட்டப்பட்ட உமாசகாயன், பரமேசுவரன், பிரபு, திரிலோசனன். நீலகண்டன். பிரசாந்தன்' 'இருக்ஷணபிங்களன் உமாபதி, பசுபதி' என்பனவாதித்தகரவித்தை, மந்தராதித்தவித்தைகளின் வசனங்களென்க. 'க்ஷரம் அவித்தை, அமுதம்; வித்தை' 'க்ஷரம். பிரதானம், அமுதம், அக்கரம், 'அமுதன் புதல்வர்காள் அனைவரும் கேண்மின்' 'இவ்வுலகத்தை வியாபித்த ஏகாசனைய றிந்தோர் அமுதராவார்' 'அநத்துக்கீசன பாபநாசன், பகவான், உயிர்க்குயிர். அமுதன் உலகத்துக்கிடமாயுள்ளவன; அவனையறிந்து.' அமுதத்துக்கக் கறை என்பனவாதி பலவேதவாக்கியங்களில் அமுதமென்னும் சொல் எம்பிரானிடத்தும் அவனுடைய சுத்தசொரூபமாய மோக்ஷத்தினிடத்தும் அவன்து சொரூபமாய ஆன்மாவிடத்தும் உபயோகப்பட்டுள்ளதைக்காண்க. மேல் 'முப்பதன்' முக்குணோபாதி பெற்றுப்பலபொருளாய்த்தோன்றும் பரன் (அவனது) அமுதம் =முமுட்சுக்கள் வழிபடும் திவ்வியசொரூபம், வானகத்து = பரமாகாசமெனப்படும் மாயையில் உளது என்பதாதி பலபொருள்களை யூகித்தறிக. இனி இம்மந்திரத்தில் முடிந்தபொருள் இவனது= முன்மந்திரத்தில் ஈசானனெனக் குறித்தோதிய பரசிவனது பாதம்= ஓர் அம்சம் எப்பூதங்களும்= பூதங்களெலாம். முப்பதன்= அப்பூதங்களிலும் அதிகமாயுள்ளவன், அல்லது அவைகளிலும் அதிக வம்சம்பெற்றவன் அல்லதுமூவவத்தை கடந்தமுதல்வன், அல்லதுமேரு, கைலை இமையமலை என்ற மூன்றிடங்களிலும்நித்தியம் ஆவிர்ப்பவிப்பவன் அல்லது முக்குணோபாதி பெற்று மும்மூர்த்திகளாய் விளங்குபவன் (அவனது) 'அமுதம், நித்தியம், நாசமற்றது, அளவுகடந்தது, அவத்தைகடந்தது ஆன்மரூபமாயுள்ளது. உமையுடன் கலந்து, மாயையிற்றோய்ந்தது. மேற்கண்ட இலக்கணம் பொருந்திய திருவுருவம் வானகத்தில்= சிதாகாசத்தில், துரிய துரீயாதீதாவத்தைகளில, உன்மனையீறான லோகங்களைக் கடந்த சோமலோக மெனும் கைலாயத்தில் என்பதாதி முறையேகூட்டுக. இன்னவையெல்லாம்=இதுவரை குறிக்கப்போவதுபான எல்லாம் இவனது =ஈசானபிரானது 'மகிமை; =விபூதி' அதனினமேலும் மேற்கண்டதிருசியப்பொருள்களின் மேலும் புருடனுளனும்= புருடன் வியாபித்துளனும் 'உலகத்தை வியாபித்தவன் புருடன், என்பதாதிச் சுருதிவசனங்களாலென்க. அளவை கடந்த அற்புதரூபனென்பது கருத்து.

மூன்றும் மந்திரம்

முற்றிற்று.

---

### நான்காவது
### மந்திரம்.

---

இனிப்பரமேசுவரன். காண்பொருளனைத்தும் தோன்றுமிடமாதல்பற்றி அவற்றின் குணதோடங்கள் அவனையும் பற்றுமோவென ஐயம் நிகழ அதைநான்காம் மந்திரம் விலக்குகின்றது.

மூப்பாதம்முளவிவன் மேற்சென்றான்
புருடனவனதுபாதமீண்டிங்குள
பின்னருமுணபனவுண்ணாதனவும்
என்பனவனைத்தும்வியாபித்தனனே.

முப்பாதமுள = முற்கூறிய மூன்றுபாதங்களைப் பெற்றஇவன்புருடன் = ஈசானன் 'மேல் = சமசாரத்தை ஒழித்து 'சென்றான் = பிரபஞ்ச சம்பந்தமின்றிப் பரிபூரணமாய் நின்றான் இவன் பாபசம்பந்த மற்றவன்' என்பதாதி சுருதிவாக்கியங்களால் 'இனைது' சசாங்கடந்த சற்சித்தனனுடையபரமேசுவரனதுபாதம் = அம்சம் இங்கு = காண்பொருள்களனைத்திடத்தும் உள = உண்டு அதனாற்றான் அசேதனமாகிய விவ்வுலகம் சேதனம்போலும், அசத்தாயது சத்துப்போலும் தோன்றுகின்றதெனக. 'எல்லாம் சேதனம்போலத் தோன்றும் ஈசன்சைதன்னியச் சேர்க்கையாலென்றும் 'எல்லாவற்றையும் ஒரு அம்சத்தி லடக்கிநாணின்றேன், என்றும் பிரமாணங்கள் கூறுகின்றன. 'மீண்டும்' என்றதனால் சம்சாரம் அநாதிப்பிரவாகசித்திய மென்றேற்பட்டது. பின்னர், முற்கூறிய ஏதுவால் 'அனைத்தும்' தேவர், மக்கள், விலங்கு. விருக்ஷம். கொடி. செடிமுதலிய எல்லாரூபமாய் வியாபித்தனன். விவர்த்தகாரணமாயினன் (ஆதலால் அவனே) உண்பன = ஜங்கமங்களாகிய மனுஷர் விலங்கு முதலியன. உண்ணாதன = தாவரம், மரம் முதலியன (ஆயினான்) 'இவனைமேலும் கீழும் நடுவிலும் அளவிட முடியாது' என்றுவேதம் கூறுதலால் மேற்சென்றானென்றவிடம்மேலென்னும் சொல் அவனது வியாப்தியையுணர்த்துமேயன்றி இடத்தைக்குறிக்காது. இடம், பொருள், காலம், மூன்றினையும் கடந்தது அவனது சுரூபமாதலாலெனக. ஈண்டு மரமுதலியவற்றிற்கும் தாம்வளரவேண்டிச் சிலபொருட்களை உட்கொள்ளும் இயலிருத்தலால் இங்குஎடுத்தோதப்பட்ட உண்பன உண்ணாதன எனப்படும் இரண்டும்ஜங்கமதாவரங்களென வியாக்கியானஞ் செய்யப்பட்டதறிக. (1) 'அசன' மென்னும் வடசொற்கு உண்பதும், வியாபித்தலும் பொருளாதலாலெனக.

நாலாவது மந்திரம்
முற்றும்.

---

(1) ஸாசனம், அனசனம், இவ்விருசொற்களே மூலத்துள்ளன. அவற்றில் உள்ள அசனச் சொல்லை பெருவழக்குபற்றி ஈண்டு உண்டிப் பொருளதாக்கி உண்பன உண்ணாதனவென மொழிபெயர்த்தார் எனக.




## ஸ்ரீநிவாசதீக்ஷிதீயம்

### ஐந்தாம் மந்திரம்

மேல். அவனே உலகத்திலுள்ள காண்பொருள்களனைத்துமாய் விவர்த்தருயினனோ எனில் அங்ஙனமன்று. விராட்டென்றுபெயரையுடைய பிரமாண்டதேகவிசுவருபனைச் சிருஷ்டித்து அவனையே யதிஷ்டித்து அவன் வழியே உலகத்தைத்தன்னுளேற்றினான் என்று குறிக்கின்றது ஐந்தாம் மந்திரம்.

விராட்டவன் பாலுருக்கொண்டுதித்தனனே
விராட்டவன்றனையதிட்டித்தவன்புருடன்
அவனேபிறந்துவிரிந்தனன்பின்னர்
பூமியைநகரைவியாபித்தனனே.

அவன்பால்=முற்கூறிய விலக்கணம் பெற்ற பரமபுருடனிடம்; விராட்டு=விசேஷமாய் எவனிடம் பொருள்கள் பிரகாசிக்கும் அவன் (வி=விசேஷம், ராட்டு=பிரகாசித்தல்) எவன் விசேடமாய் வஸ்துக்களைப் பிரகாசிப்பிப்பான் அவன் விசேடமாய் பிரகாசிப்பவனென்றுவது பொருள் கொள்ளலாம். அவன் காண்பொருளனைவையும் "ஒருங்கமைந்த திருமேனி பெற்றுளானாதலின் அவனைப் பிரமாண்டதேகனென உபசரிப்பது வழக்கம். இனி அவ்விராட்டினந்தர்யாமியே ஜீவனெனக் குறிக்கின்றார். விராட்டவன்றனை யதிட்டித்தவன் புருடனென்று. விராட்டவன்றனை = பிரமாண்டதேகனை, அதிட்டித்தவன் = அந்தரியாமியாய்த் தன்வசப்படுத்தி நடத்துபவன், புருடன் = பரமசிவன் அதனைப்படைத்ததனுள்நிறைந்தான் என்பதாதி வேதவாக்கியங்களால் தம்மிடம் முதலிலாவிர்ப்பவித்த விராட்டைத்தாமே அந்தர்யாமியாய் நின்றதிட்டித்து ஸ்தூலரூபபிரமாண்டதேக அபிமானியாய் ஜீவபாவத்தைப்பெற்றானென்பது கருத்து. அது கொண்டே மாதவாசாரியரியற்றியபாடியத்தில் (1) பிரமரூபத்தைச்சிருஷ்டித்து அதனுட்ஜீவரூபமாகப் பிரவேசித்து பிரமாண்ட அபிமானிதேவதையாய்ச் சிவனிருக்கின்றான் என்றுளது. ஆதல்பற்றியே அவன் முதற்சரீரி அவனே புருடனெனப்படுவான் என்ற சுருதியும் இவ்விராட்டவன்றன்னையே குறித்தெழுந்ததென்று வாகிக்கற்பாலது. அங்ஙனமே அதர்வணவேதம் உத்தரதாபினியோபநிடதத்தில் 'அப்பரமன் பூதங்கள், இந்திரியங்கள், விராட், தேவர்கள், கோசங்கள் இவைகளைப்படைத்து அவற்றுள் நிறைந்து மயக்கிற்றவன் மயக்குற்றவன்போல் மாயையாலே விசரிக்கிறான்' என்றுபடிக்கப்படுகிறது. ஈண்டு தேவதைகள்,-சரீராபிமானிகள், கோசங்கள் அன்னமய முதலியன உண்ணிறைந்து என்பதில் அந்தர்யாமியாய் என்று கூட்டுக. 'மயக்கிற்றவன் இயல்பில் சுயப்பிரகாசன் மயக்குற்றவன்போல் விசரிக்கி

---

1 பிரமரூபத்தை என்றதற்கு சதுர்முகனை என்று பொருளல்ல, மற்றுமுதலில்பிரயத்துக்குத்தோன்றியரூபத்தை என்பதே கருத்து. அல்லது விராட்டென்பவன் சதுர்முகனென்றே ஆசிரியர்கருதினார்போலும்

ருன்' என்றதனால் அவனிடம் தோன்றும் மயக்கமும் அதன் வழித்தோன்றும் விவகாரமும் போலிப்பொருள்களாயின. மாயையாமவை என்று தோற்றினமையால் 'மாயாமந்திர' முலகமெனவற்பட்டது. பிறகு 'அவனே பிறந்து' பிறந்தவுடன் (பிறப்பிற்றுமேன: விரிந்தனன = பலபொருள்களாய்த்தோற்றினன். ரூபந்தோறும் வேறாயினன் = உள்ளும் புறம்புமென்ற சுருதியில் பலரூபனாயினனென்பது கருத்து. இவன் பிறந்து சிறிதுகாலங்கழித்து பலரூபனாயினனில்லை, பிரபஞ்சமனைத்தும் இயலில் அவனுக்கமைந்த திருமேனியாதலாலென்க. ஊன். புலால், முதலிய பலபொருள்கள் மயமான இச்சடலத்துக்கு ஒருஜீவன் அபிமானியாதல்போல், நானாப்பொருண்மயமாயமைந்த இப்பிரமாண்டத்துக்கு ஒருவனே யபிமானியாதலால், சரீரத்தை ஒன்றெனக் குறிப்பிட்டதுபோல் இப்பிரமாண்டதேகனையும் ஒருவனெனக் குறித்தது. 'பின்னர் பூமியை நகரை வியாபித்தனனே' 'பூமியை, நகரை' என்றது ஏகதேசமாய் எல்லாப்பொருள்களையும் குறிக்குஞ் சொல்லென்க. ஈண்டு 'பின்னர்' என்றது காலத்தைக் குறிக்காது வாக்கியாலங்காரமாய் நின்றது. அங்ஙனமே மநு:— 'இஃது இருள் நிறைந்தறியப்படா நிலைமையில் (1) அக்கரமன்றி இருந்தது' என்று தொடங்கி 'மகாபூதாதிகளாய்த் தெரிந்தோர் வீரியம்பெற்று இவ்வுலகந் தம்முட்டுலங்க; அறுகுணநிறைந்தவோர் சுயம்பு, அவ்விருளை யதிட்டித்த ஏகநாயகனிடம் பிறந்தான்' என்று இருள்மாத்திரையாய் நிறை ஆதிசிருஷ்டியில் (ஈண்டு இருளென்றது மூலாவித்தை) அவ்விருளையதிட்டித்த பரமேசுரனிடஞ் சகலபூதங்களுக்கும் காரணனான பிரமாண்டதேகன் பிறந்தானெனச் சொல்லுகிறார்.

இங்கு பிரமாண்டதேகனெனக்குறித்தது, 'எவன் சந்தங்களுக்கு நாயகன், விசுவரூபன்' என்பதாதி பலவேத வாக்கியங்களில் விரித்தோதிய விண்டுவேயெனக்கொள்க. 'விசுவன். நாராயணன். பரன்' என்று வேதம் கூறுதலானும், அவனது முகமுதலிய அவயவங்களினின்றே பிராமணாதி நான்கு வருணங்களும் பிறந்ததாக இவ்வுபநிடதம் வருணித்தலை யனுசரித்து விஷ்ணுபுராணாதிகள் வருணித்தலானும், விராட்டென்பவன் விண்டு என்பதே ஒக்கும். கீதையில பரமாத்மாவுக்கே பரமேசுவரதிவ்விய யோகவைபவத்தால் இயற்கையில் அமைந்த விசுவரூபமுண்டென்பது நாட்டப்பட்டது. அற்றேல் 'சுருதி, அநுமான, முதலிய மற்றவரிடத்தும் அவ்விசுவரூபமிருத்தலானும் விராட்டென்னுஞ்சொல் பிரமதேவன் வியூகங்களுக்குள் ஒருவரிடத்தும், ஹிரண்யகர்ப்பனிடத்தும் பெரும்பான்மையிற் வழங்குதலானும், நான்குவருணங்கள் முகமுதலிய அவயவங்களில் தோன்றிய கதையைச் சிவனிடத்தும் பிரமனிடத்தும் புராணங்கள் வருணித்து நிற்றலானும்' இங்கு ஒருதலைச் சார்பாய் விண்டுவே விராட்டெனக் குறித்தது என்னையெனிற் கூறுதும்:—

---

1 அக்கரமின்றி = நாமமின்றி, இதுரூபத்துக்கும் உபலட்சணமாகவே நாமரூபங்களற்று என்பது பொருள்.

ததீசி, அநுமான் முதலியோரிடம் தவவிசேடத்தால் கிடைத்த விச்சுவரூபம் விராட்டிடமமைந்த விச்சுவரூபத்தைப்போன்று நேரில் பரமேசுவரதிவ்ய ரூபமாகக் குறித்திடஒவ்வாது. மற்று பிர்மதேவனது வியூகமூர்த்தி அவனிடத்தே தோன்றியவனாதலின் அவனை யீண்டு விராட்டெனவும் கூடாது. பிரமதேவன் சகல பிர்மாண்டங்களையும் தன்சரீரமாய்ப் பெற்றுள்ளானென்பது எந்தபிரமாணத்திலும் கிடைத்ததில்லை. மேல்மனுவசனத்தில்இருணயகனிடமதோன்றியபுருடன் உலகத்தைச்சிருட்டிக்க விரும்பிமுதலிற்சிருட்டித்தசுவர்ண அண்டத்தில்பிர்மன் பிறந்ததாக யேற்படுதலால் ஈண்டுஈசனிடத்துத்தோன்றியவனவனாகான். பிராம்மணாதிகளை முகமுதலிய அவயவங்களினின்று சிருட்டித்தானென்று ஓதுவதும், பரமேசுவரனிடம் பெற்றதிருவருளால் தமக்கமைந்த அவாந்தரவாதிபத்தியத்தைப்பற்றிய கதையேயென்று கண்டொதுக்கவேண்டும். ஆயின் யாம்முற்கூறியபடியே நியாயமெனக்கொள்க. பின்னர் வராகரூபங்கொண்டு நீரில்முழுகினான். 'அச்சிவாத்மாவும் சத்திரூபனுமான பிரஜாபதி நீண்டகாலத்துத் தன்னிச்சையால் நீரிற்சயனித்து நாராயணனென்னும் பேரைப்பெற்றான்' 'நீரில்முதலிற் சயனித்தவதனாலே யவனை நாராயணனென்பார்' 'பிரம்மாநாராயணனாய் நீரில்துயின்றான்' என்பதாதி சுருதி, ஸ்மிருதி, புராணங்களிற்பூமியையெடுக்கவேண்டியவராக அவதாரமும். நாராயணனென்னும் பதத்தின் பொருளாய் நிற்றலும், அங்ஙனம் அண்டம், பத்மமுதலிய பொருள்களிடத்துத்தோன்றிமறைதலும்.கற்பபேதங்களால் பிரமதேவனிடத்துச் சம்மந்திப்பது போல் இங்குள்ளவிராட்டென்னும் சொல்லை ஒருவாறு (1) சேர்த்திட்டாலும் சேர்க்கலாம். ஆனால் பரமேசுரனிடத்தில் முதலிற் தோன்றிய விராட்பிரமனாயின் விஷ்ணுவாதி சமஸ்தப்பிரபஞ்சங்களும் அவனிடத்தில் பிறந்ததாகக் கூறநேரிடும்.

நிற்க; 'ஒருவனன்றோ நாராயணனாயினான்' என்றசுருதிக்குப்பரமேசுரனிடம் நாராயணன் தோன்றினானென்றுபொருள் கூறித்துணிந்த சிவதத்வவிவேகநூலார், நாராயணனே இவ்விராட்டென்பதில் தன்கருத்தைவெளியிடுகின்றார்களாதலின் இவ்வுபநிடதம் நாராயணனையேவிராட்டெனக் கூறி, அவனையே அவாந்தரசிருஷ்டாவாகவுங்குறித்து, அவனையேவிசுவரூபம் முதலியவைபவம் பெற்றவனென வர்ணிக்கவெழுந்ததெனக் கொள்ளின் நாராயணபூஜையில் இச்சூக்தத்தை விநியோகித்ததும்வைஷ்ணவசாந்தியில்விநியோகித்ததும் ஒருவாறு ஒவ்வும். அங்ஙனமே காரணகுணம காரியத்திடமமையுமாதலின், 'ஆயிரஞ்சென்னியன' என்பதாதி இலக்கணங்கள் நாராயணனிடத்துள்ளனவெனமகோபநிடதமுதலிய சிலவுபநிடதங்கள் கூறியதும் குற்றமுறாது. அங்ஙனம் 'ஈசானனென்னும்

(1) சேர்த்திட்டாலும் = அநேகவிடங்களில் பிறந்ததுபோலீண்டு விராட்ரூபங்கொண்டு சிவன்பாலுதித்ததெனப்பொருள் கொண்டாலும்.

(1)சுருதிவலிமையாலிதற்குக்கிடைத்தசிவபரத்வமும், சிலபுராணங்களின் உபபிருங்கண வழியாலமைந்த விஷ்ணுபரத்வமும் விரோதியாது. பரமேசுவரனிடத்து பிராமணாதி நான்கு வர்ணங்கள் தோன்றியதாக வர்ணிக்கப்படுவதும் காரியத்தன்மையைக் காரணத்திலேற்றித் துதித்ததாகக்கொண்டால் விரோதப்பட விடமில்லை. அற்றேல் விராட்டென்னும் சொல்ருத்திரனையே கூறும். அவனே நீரொப்பியமுக்கிய சுருதியாகிய ஈசான சொற்குப் பொருளாயுள்ளானென. 'ஆதலா லீசானன், மஹாதேவன், மஹாதேவனென்றுதேற்றி அவ்வீசானன் நாரணனிடத்துப் பிறந்தான்' என மகோபநிடதங்கூறுதலானும், 'பிறக்காதவன் நீயன்றே; பயமுள்ளவன் உனதடிபணிவான், உருத்திர! உன்தென் முகத்தாலென்னை யென்றுங்கா' என்பதாதி சுருதிகளில் ருத்திரன் பிறவாதவனென்றுகுறித்தது கருப்பையில் வாசங்கொள்ள வில்லையென்றப் பொருளுடையதாக கூறவேண்டுமே யன்றிவேறு வழிகொண்டால், பிரமன், முகத்திற்றோன்றி அவதாரமும், துர்வாசமுனியவதாரமும் ஒவ்வாமலொழியுமாதலாலும், அதேமகோபநிடதத்தில் 'ஆயிரம் சென்னியன் ஆதிக்குறிகள் நாராயணனிடத்துக் கூறப்பட்டமையானும் அவனிடம்பிறந்த ருத்திரனே விராட்டெனக்கோடலொவ்வாதோ' வெனின் அற்றன்று. நாராயணனிடத்தில் ஆவிர்ப்பவித்த ருத்திரனிடத்திலும் 'ஸ்ரீயைத்தரித்து' என்பதாதி வசனங்களால் அங்கங்கள் அவயவங்களெனப்படும் மகாகுணங்கள். நாராயணன் சங்கற்பஞ் சிறிதுமின்றியமைந்ததாகக்குறிப்பிடப்பட்டமையால், மகோபநிடதங்கூறிய சிவாவதாரம் இச்சாவதாரமே சிலாலோகாதிகளில் அவதரிப்பதுபோலவாதலால் மேலும் அதேயுபநிடதத்தில் சிவநாமதேயமாகத் துணிந்து ஒதப்பெற்ற ஈசானனென்னும் சொல்லுக்கு அடைசொற்களாயமைந்த 'ஆயிரம் சென்னியன், ஆதிச்சொற்களை அப்பதப்பொருளிடம் சேர்ப்பதேயுசிதமன்றி அவனுக்கோர் கற்பனையப்பனைக்கற்பித்து அவனிடஞ்சேர்த்தல் கூடாது. மேல் பிறந்தான் எனக்குறிக்கப்பட்டவன் பிறவாதவனே என்றுமேதம் விதந்தோதியபிறப்பிலிப்பொருள்களால் ஆகாதெனன்பது யாவருமறிவார். இனிப்பிரமன் முதலிற் பிறந்ததும் அப்பரமனுகான். உலகபஞ்சகிருத்திய நிகழ்வதற்கெனத் தமோகுணஉபாதிபூண்ட ருத்திரமூர்த்தியே யென்பது சித்தாந்தவுண்மை. ஆயின் நாராயணனே விராட்டென்டதில் எதும் விரோதமில்லை. அநேகப்பிரமாணங்களும் ஒத்துவருகின்றன. பிரமதேவன் விராட்டென்பதில் தக்கபிரமாணங்கள் அகப்படுவதரிது. ருத்திரனே விராட்டென்பதில் ஓர் சிறிதும் பிரமாணமில்லை. எதுவுமில்லை. சிலபிரமாணவிரோதமுண்டு என்பதாதி விரிவஞ்சி விடுத்தாம். இந்த மந்திரத்தின் முடிந்தகருத்து 'அதன்பால்' முற்கூறிய இலக்கணம்

(1) சுருதி = இவ்வுபநிடதத்துவக்கத்தில்யாம் குறித்தபொருளறியறிகுறிகளின் முதன்மைபெற்று, இடுகுறியாற்றலால் பொருளைத்தணிந்தோதும் சொல்லே.

பெற்ற ஈசானன் பால் 'விராட்டு' பிரமாண்டத்தைத் தேகமாய்ப் பெற்ற ஹரி அல்லது பிரமன், அல்லது சங்காரருத்திரன் 'உருக்கொண்டுதித்தனன்' பிறந்தான் 'விராட்டவன்றன்னை அதிட்டித்தவன்' அந்தரியாமியாயுட்சென்று நிறைந்தவன் புருடன. 'அவனே பிறந்து' அவன் பிறக்கும்பொழுதே 'இரண்ணியகர்ப்பன் பிறக்கக்கண்டான' என்னும் சுருதியிருத்தலால் ஈண்டு பிறந்தென இறந்தகாலத்தைக்குறிக்கும் எச்சவிகுதி நிகழ்காலத்து வைதிகமாதலால் உபயோகிக்கப்பட்டது. 'விரிந்தனன்' காண்பொருளனைத்துமாயினன். பின்னர் பூமியை 'பூதாதிகளை, நகை;சரீரங்களை வியாபித்தனனென்பது.

௫-ம்மந்திரம்முற்றிற்று

---

## ஆறும் மத்தியாயம்




—— (०) ——

மேல் பிரமாண்டதேகன் சகலசரீரசம்பந்தமுடைமையால் அவனிடத்துத்தோன்றிய தேவர்களென்னும் இந்திரியாபிமானிதேவதைகளின் சிருஷ்டிக்கிரமத்தை மானசயாகமாகவுருவகப்படுத்தி, உலகச்சிருஷ்டியை முறையே பத்துமந்திரங்களால் கூறுகின்றார். அவற்றுள் முதல் மந்திரம்.

எந்தப்புருடனென்னுமவிசால்
இமையோர் வேள்வியியற்றினரதற்கு
வசந்தனுச்சியமாயினன் க்ரீஷ்மன்
இத்துமச்சரத்ருதுஹவிசாகும்மே

எந்தகாலத்தென்று வருவித்து இதனுட்கூட்டிடலால் எந்தக்காலத்துத்தேவர்கள் விராட்டினிடந்தோன்றினரோ அந்தக்காலம் என்பது கருத்து. புருடனென்னும் = விராட்டெனக்குறித்த பிரமாண்டதேகன் என்கிற அவிசால், வேறு அவியின்மையால் அதுவே அவிசாகக்கற்பித்தார்களென்பது கருத்து. இமையோர் ஈண்டு இமையோர் என்றது இந்திரனுதியோரையன்று; மற்று ஆதிகாலந்தொடங்கி அமலனடி நிழல் நீங்கபெருதநித்தியகணநாதர்களையே, வேள்வியை = மானசவேள்வியை காயிகமாய்செய்தற்குத் தகுந்தசாதனமின்மையானும் தேவர்களுக்கு வேள்வியியல்பிலமைந்தமையானும் என்க. இயற்றினர் = கற்பித்தனர். எங்ஙனமெனில் அதற்கு = அந்தவேள்விக்கு, வசந்தன் = இளவேனிற்காலம் ஆச்சியமாயினன; கிரீஷ்மன் = முதுவேனில் இத்துமச்சமித்துக்களிருப்பதை அடுத்த மந்திரங்கூறும். சரத்ருது = கூதிர்ப்பருவம், அவிசு = அவிசாயதெனக்கூட்டுக. ஈண்டு இவ்வேள்விக்குப் புருடனே அவியென்று கூறப்பட்டது. பின் சரத்ருது அவிசாதல் எங்ஙனமெனில், அடுத்தமந்திரத்தில் புருடனைப்பசுவாயாத்தனரிமையோர் என்று புருடன் பசவாகக் கற்பிக்கப்பட்டமையானும் ஆச்சியம் வசந்தனுபினமையானும் சர

த்ருது (1) புரோடாசமுதலிய ஹவிசாயதென்க. மூன்றருதுக்களை யெடுத்தது அவற்றின் சிறப்பைநோக்கி; வசந்தம் சிசிரருதுவுக்கும் (பின்பனிப்பருவம்) கிரீஷ்மம் கார்ப்பருவத்துக்கும், சரத் முன்பனிப்பருவதத்துக்கும் குறிப்பாமாதலின் முதலில் யஞ்ஞத்துக்குச்சம்பாதிக்கவேண்டியவை ஆஜ்யம் இத்மம் சமித்துகள் அவ்வப்புரோடாசங்களுக்கு வேண்டிய தானியமிவையே எனக்குறிக்கப்பட்டது.

௬-ம் மந்திரம் முற்றும்.

---

## ஏழாவது மந்திரம்

——()——

முன்மந்திரத்திற் குறித்த இத்மத்திற்கு எண்வகுத்துடசு இஃதென இவ்வேழாமந்திரம் குறிக்கின்றது.

ஏழுபரிதிகள் இவனுக்காயின
மூவேழுசமித்துகண் முறையிற்சமைந்தன
புருடனைப் பசுவாயாத்தனரிமையோர்
யாகந்தன்னையியற்றினரன்றே.

இவனுக்கு = மேற்கண்ட எஞ்ஞத்துக்கு என்பதுபொருள். 'ஏழுபரிதிகள்ஆயின. மூவேழுசமித்துகள் = இருபத்தொருசமித்துகள் சமைந்தன = யாகந்தன்னை இயற்றினரன்றே = அவர்கள்யாகத்தைச் செய்யுங்காலத்தே 'புருடனைப் பசுவாயாத்தனரிமையோர்' விராட்டென்னும் புருடனை முற்கூறிய இமையோர் மானசமென்வழியிற்பசுவாக்கினர். பசுவெனப்பாவித்தன ரென்பது கருத்து. ஈண்டு 'ஏழுபருதிகளென்றது காயத்திரிமுதலிய ஏழுசந்தங்களெனவும் ஆவை ஆகவனீய, ஔத்திரவேதிகம் என்னும் இரண்டு அக்கினிகளில் போடும்மும்மூன்றுபருதிகள் ஆக. ௬—போக ஏ-வது சூரியனெனவும்' சாயணீயபாஷ்யம் வேதத்திலும் முன்புறம் பருதிபோடவேண்டியதில்லை; ஆதித்தனே யெழுந்து அரக்கர்களை யொழித்து அப்புறம் பருதியாவனென்று விளங்குகின்றது. அங்ஙனமே மாதங்கள் பன்னிரண்டு, ருதுக்கள் ஐந்து, லோகங்கள் மூன்று, (2) ஆதித்தன் இருபத்தொன்றாவனென்று வேதத்தில் மற்றோரிடம் புகழ்ந்தோதப்பட்ட இருபத்தொரு பதார்த்தங்களே ஈண்டு இருபத்தொரு சமித்துக்களென்று சொல்லப்பட்டன. யாகம் செய்த தேவர்களோ முற்கூறிய விராட்டினது பிராணன்களும் புலன்களுமெனவும்

---

(1) புரோடாசம் = இது தான்யத்தின் விகாரமாயஹவிஸ்.

(2) ஆதித்தன 21,வது, என்றது சமித்துக்களைப் பொதுவாய்க் கூறியது. அதில்பருத்தியும் அடங்குமாதலால் அவைகளைச்சிறப்பாய் வேறெடுத்து ஓதினும் அவற்றுள் சிறந்த ஆதித்தனே இங்கு எடுத்து பருதி சமிதிடைங்குமென்பதைக் காட்டுவதற்காகவேயாதலின் இஃது கூறியது குற்றமல்ல.

இப்பொருள் சுருக்கி முன்மந்திரத்தால் உரைக்கப்பட்ட தெனவும் ஆன்றோர் உரைசெய்தனர்.

7-வது மந்திரம் முற்றும்.

---

8-வது மந்திரம்

—:():—

இனி எஞ்ஞக்கிரியையின் முறையைச் சொல்லுகின்றார்.

முன்னுறத்தோன்றியபுருடனை எஞ்ஞனை
அந்தநல்வேள்வியிற்புரோக்ஷித்தனரே
அவனலிமையோரியற்றினர்வேள்வி
சாத்தியரிருடியர்தாமுமியற்றினர்.

(இ—ள்) முன்னுறத்தோன்றிய புருடனை = விராட்டை, எஞ்ஞனை = விஷ்ணுவை, 'எஞ்ஞனுமன்றோ விஷ்ணு என்னும் சுருதியாலெனக- (பஞ்ஞசாதனமானபசுவாகப்பாவித்து) அந்தநல்வேள்வியில் = முற்குறித்தயாகத்தில், புரோக்ஷித்தனர் = அவிசுக்குள்ள சம்ஸ்காரத்தைச் செய்தனர்- அவனால் = முற்கூறியபுருடனால், சாத்தியர் = சிருட்டியைச் சாதனஞ்செய்ய யோக்கியரான பிரஜாபதிகளென்று கூறினர் சாயனசாரியர்; இருடியர் = வேறுருஷிகள் அக்காலத்தின்மையால் வேதமந்திரங்களில் கண்டவர்கள் முற்கூறிய இமையோர்வேள்வியியற்றினரென்று கூட்டிமுடிக்க.

8-வது மந்திரம், முற்று:-

—()*()—

9-ம் மந்திரம்.

இதனால் யஞ்ஞபலத்தைக்கூறுகின்றார்:—

அந்தச்சர்வஹுதத்தாகியவேள்வியில்
பிருஷத்தியாச்சியமபெரிதுசமைத்தனர்
காட்டகத்துள்ளனநாட்டகத்துள்ளன
அவைவாயவ்வியபசுக்களாக்கினரே.

(இ—ள்.) (1) சர்வஹுதத்தாகிய = எல்லாப்பொருளுமாய் நின்றவிராட் இந்தவேள்வியில் ஹவிஸாகி நிற்றலால் இது சர்வஹுதத்தெனலாயிற்று. அல்லது சர்வதேவர்களாலும்ஹோமம் செய்யப்படும்பொருளையும் சர்வஹுதத்தெனலாம். இங்கு வேள்வியென்னுஞ் சொற்கு யஞ்ஞமென்னுமோர்கர்மம் பொருளாவதுபோல் நாராயணனும் பொருளாவானென்பது முன்மந்திரத்தில் காட்டினோம். ஆக இவ்வேள்வியில் என்பதால் அந்தக்கன்மத்தில் என்றாவது நாராயணனிலென்றாவது பொருள்கொ

---

(1) சர்வஹுதது. சர்வ = எல்லாம் ஹுதது = ஹோமம்செய்தல். இவ்விருபொருளுங்கூடிய பொருளெல்லாம் இதன்பொருளாகலாம்.

ள்ளவேண்டும். பிரஷத்தாஜ்யம் = தயிருடன் கலந்தநெய். தயிருடன் கலந்த நெய்க்கு பிரஷத்தாஜ்யமென்பது சிரௌதவழக்கு. இசனுல்போகத்துக்கேற்ற எல்லாப்பொருள்களும் குறிக்கப்பட்டனவாதலின் அவைகளின் சிருஷ்டி முதலிற்கூறப்பட்டது. வாயவ்யபசுக்கள் = வாயுவைத்தேவதையாகப்பெற்ற பசுக்கள்; 'வாயுக்களாவிரென்றுன்வாயு அந்திரிக்ஷத்துக்கதிபதி; நல்லகாற்றுநிறைந்த விடத்திற்றனே பசுக்கள் ஜீவிக்கும்; ஆதலின் பசுக்களை வாயுவினிடத்தொப்புவிக்கவேண்டும்' என்று யஜுர்வேதம் கூறிநிற்றலால் பசுக்களேவாயவ்யங்களென்றது சாட்டகத்துள்ளன = மான் முதலியன. நாட்டகத்துள்ளன = ஆ முதலியன. ஈண்டு பசுக்களென்றது நாற்கால் ஜந்துக்களை; ஆக்கினர் = சிருஷ்டித்தனர்,

௯-ம் மந்திரம் முற்றும்-

---

10-ம் மந்திரம்

முற்கூறிய சிருஷ்டியை விரிக்கின்றார்.

---

சர்வஹுத்தாயயஞ்ஞன்றன்பால்
ரிக்குகள்சாமங்கந்தஸ்யஜுஷை
வாயினவல்லாந்தோன்றினவடைவே.

(இ-ள்.) 'சர்வஹுத்தாயயஞ்ஞன்றன்பால்' என்பதற்கு அந்தச் சர்வஹுத்தாகியவேள்வியிலென்பதபோல் பொருள்கொள்க. ரிக்குகள் சாமங்கள் இவை அடைவே தோன்றின. சந்தங்கள் காயத்திரிமுதலியன.

---

11-ம் மந்திரம்

பசுக்களாக்கினரென்பதை விரித்துரைக்கின்றார்.

---

அச்சுவமிருபாற்பற்களுள்ளனவும்
ஆக்களயங்களவிகளுமெல்லாம்
அன்னவன்பாலேதோன்றின முறையே.

(இ-ள்) அன்னவன்பாலே அச்சுவங்கள் தோன்றின. இருபாற்பற்களுள்ளன = மேலும் கீழும்பற்களுள்ளமிருகங்கள். 'ஆக்கள், அயங்கள், அவிகள் அயங்கள் அவிகளென்பன ஜாதிவேற்றுமைபற்றி வேறுகூறினர்.

---

12. மந்திரம்

மேற்கண்டபடி நோக்கிய சிருஷ்டியைக்குறித்துப்போக்தாவின் சிருஷ்டியை விருத்தியாகக்காட்டுகின்றார்.

எவ்வகையாகப்புருடனையாக்கினர்
எவ்வகையாகவேற்றுமைசெய்தனர்
இவனதுமுகம்கைதுடைகள்கால்கள்
கூறப்படுவனயாவைகொலென்னில்

(இ-ள்) இதுவினா. புருடனை ஆக்கினோர் எவ்வகையாக்கினர்? எவ்வகையாக வேற்றுமை செய்தனரென்று வினவியதன்கருத்து. சிருஷ்டியில் ஒரேவிதமான மனுஷனா? அல்லது பலவகைத் தாகவோவென ஐயம் நிகழ்ந்தெழுந்ததென்க. ‘இவனது முகம் கை துடைகள் கால்கள் யாவை’ என்று கூறப்படுவன. கூறப்படுவனவென்பதை எல்லாவற்றிலும் கூட்டிக்கொள்க.

---

## 13.ம் மந்திரம்.

விடை.

பிராமணனிவற்குமுகமாயினனே
அரசன் கைகளாக்கப்பட்டனன்
அவனதுதுடைகள்வைசியனென்ப
சூத்திரன் பாதத்திருந்துதித்தனனே.

(இ-ள்) ‘இவர்க்கு முகம்’ முகத்தினின்று என்பதுபொருள், வேதத்தில் எல்லாவேற்றுமைகளுக்கும் பிரதிநிதியாய் எழுவாய்வேற்றுமையுமுபயோகப்படுத்தலாமென்பது தேடமொழியியலாதலாலென்க. பிராமணன் ஆயினன் = பிராமணன் உதித்தனன். அவ்விராட்புருடனுக்குமுகமாகத்தேவமானஸ யாகத்திற்கற்பிக்கப்பட்டான் என்பதுபொருள். மற்றதுதானே விளங்கும். யஜுர்வேதம் ஏழாங்காண்டத்தில் ‘அவன்முகத்தினின்று பிராணவத்தைச் சிருஷ்டித்தான்’ என்று தொடங்கி ‘ஆதலிற்சூத்திரன் வேள்விக்கனதிகாரி’ யென்பது வரையெழுந்து நீண்டதோர் பகுதியால் மேற்கண்ட சிருஷ்டிக்கிரமத்தை விரித்தலால் இங்குக்கண்டவினாவிடையிரண்டும் அதே பொருளில் முடிக்கவேண்டுமென்பது ஆசிரியர் சாயனர்கூற்று.

---

## 14, 15.ம் மந்திரம்.

எஞ்சிய சிருஷ்டி கூறுகின்றார்.

சந்திரன் மனத்தினின்றுபிறந்தனன்
சூரியன்கண்களினின்றுதித்தனனே
முகத்தினின்றிந்திரனங்கியுமபோந்தனர்
வாயுப்பிராணனில்வந்துதித்தனனே.
உந்தியிலந்தரிட்சமாகியதே
சென்னியினின்றுகாமுண்டாயது

காலக்களிற்பூமிகாதினிற்றிக்குகள்
இங்ஙனமுலகைக்கற்பித்தனரே

இது வெளி.

'சென்னியினின்றாகாயமுண்டாயது' என்பது பரமான்மா வியோமகேசனாகலாமெனக. 'இங்ஙனமுலகைக் கற்பித்தனரே' என்றதால் உலகெலாமொழிந்து பரிபூர்ணனாகிய ஏகரச சச்சிதானந்த பரசிவத்தினிடம் பிரமாண்ட சரீரியாகிய விராட்டென்னும் விராட்டைக் கற்பித்து, அவன்வழியிலிவ்வுலகை ஈண்டு சேதனரென்று வழங்கப்பட்ட தேவர்கள் தம்முட்டாமே கற்பித்தனரென்றதனால் இக்காண் பொருளனைத்தும் நிஷ்களப்பொருளிடத்துக் கற்பிதமென்பது உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்கும். ஆதலாற்றான் இலிங்கபுராணத்தில் 'அப்பரிபூர்ண பரமேஷ்டிக்குச் சென்னி ஆகாயமாம். உந்தி அந்தரிக்ஷமாம். சந்திரன், சூரியன், அக்கினி இவர்கள் கண்களாம். திக்குகள் செவிகளாம். அப்பரமான்மாவின் முகத்தினின்றே உலகத்தைப்படைக்கும் பிரமனும் பிராமணரும் பிறந்தார்கள். அம்மகாத்மாவின் தோள்களினின்றே இந்திரன், விஷ்ணு, க்ஷத்திரியர் இவர்களும் பிறந்தார்கள். வைசியர்கள், சூத்திரர்கள் இவர்கள் முறையே தொடையினின்றும், பாதத்தினின்றும் பிறந்தார்கள்' என்பனவாதி பலவசனங்களுள. மற்றேல் 'முகத்தினின் றிந்திரனங்கியும் போந்தனர்' என்றது முரணாமெனின், இங்கு இந்திரனென்றதை (1) 'மகேந்திரன்' என்று கொண்டு முரணுமாறின்மை கண்டடங்குக.

---

16-ம் மந்திரம்

'இப்பொருளை வேதமொன்றைக் கொண்டே யறியவேண்டுமெனவும் இருள் நிறைந்த இதையர்தார் காணாரெனவும், பேர் அறிவுடையோரே அதனுண்மையையறிவார்' எனவும் அறிவுறுத்துகிறார்.

எவ்வுருவத்தையுமாய்த்துளதியன்
காமங்களையேகழித்தெனதப் பணிவான்
அந்தப்புருடனைமகானையாதித்த
வண்ணனையிருட்கப்பால்யானறிவேன்.

இ-ள் அந்தப்புருடனை = முற்கூறிய இயல்புள்ள சர்வபரிபூரணை முழுமுதற்பொருளைக் காண்பொருளனைத்தையும் படைத்தவனும் பிரமாண்டதேகனுக்கும் பிதாவானவனை, மஹானை = மஹான் என்னும்

---

(1) மகேந்திரன் = இவனைச் சோமயாகஞ் செய்த ஆகிதாக்கினிகளால் இஷ்டிகாலங்களில் தேவதைகளாக வேறுத்து பூசிக்கப்படுகிறவன். இந்திரனென்பவன் கேவல ஆகிதாக்கினியால் அவ்விஷ்டியின் தேவதையாகக்கொண்டாடப்படுகிறவன். ஆகவே இவ்விருதேவதைகளும் வெவ்வேறென மீமாஞ்சகர் துணிந்தனர்.

சொல்லுக்கு வேதப்பெருவழக்கில் அமைந்த பொருளே பரமேசுரன் மகாதேவனென்னும் சொல்லுக்குப்பொருளென்பதில் 'அவனெதனால் மகாதேவனெப்படுவான்' என்று தொடங்கி, அவனதனால் மகாதேவனெனப்படுவான்' என்பதீறாக எழுந்த அதர்வசிரோபநிடமும் 'ஆதலாலீசானன்மகாதேவன் மகாதேவன்' என்றுஎழுந்த மற்றோபநிடதமும் (1) மற்றொருபநிடதத்தில் 'பிரமதேவன் திருமுகமண்டலத் தவதரித்த முக்கண் முதல்வனுக்கு அப்பிரமதேவனிட்ட அட்டநாமங்களில் மஹானென்னும் பெயரையிறுதியில் சித்தாந்தமாக வோதினமையும், அங்ஙனமே போதாயனமாமுனிவர், நித்தியசிவபூசை, நித்தியபிரமயக்ஞம் முதலியபற்பல விடங்களில் பரமேசுவரனுக்கிடுகுறிகளாயமைந்த 'பவசர்வருத்ர' ராதி சப்தங்களோடு கலந்து விநியோகித்திருத்தலும், ஸ்ரீசத்தியாஷாட முனிவர் சூலகவஹோமத்தில் மஹானென்னும் சொல்லைவிநியோகித்ததும் ஈசானபலி, மஹன்னியாஸமுதலிய பலசற்கருமங்களில் மஹானென்னும் சொல் அவனிடத்து இடுகுறியாகவிநியோகிக்கப்படுவதும்பிரமாணமெனக்கொள்க. அற்றேல்மகாதேவனென்னும்சொல் அநேகநிகண்டுகளில் கண்ணுதலார்க்குப்பெயராயமைந்தமையின்மகானென்னும்சொல்தேவனென்னும்சொல்லோடுகூடிச் சிவபிரானைக் குறிக்கு மேயன்றி மகானென்றதனிச்சொல்லவனைக்குறிக்காதெனில்' அற்றன்று. மேற்காட்டியபலபிரமாணங்களால் அம்மஹான் என்னும்சொல் தேவனென்னும் சொல்லோடு கூடியும் உமாபதியையுணர்த்துவதாயிருத்தலென்றது. தேவனென்னும்சொல்லுடன்கூடிய மகானென்னும் சொல்லேயவனைக்குறிப்பதன்றித் தனித்து நின்றவனைக் குறிக்காதெனபதற்கு யாதும் பிரமாணமில்லை. உலகத்தில் 'சேன' என்னும் சொல்லுடன் கலந்த 'பீம' என்னும் சொல் இரண்டாம் பாண்டவனைக் குறிக்குமாயின் பீமனென்னும் சொல்லவனைக் குறிக்காதோ? பூர்வபட்சீ, நும்மதத்தில் புருடனென்னும் சொல் தம்முன்மகா னென்னும்சொல்லைச்சேர்த்து மகாபுருடனென்றமைந்து உமது கண்ணனைக் குறித்தல்லால் தனித்தபுருடனென்றசொல்லவனையே யுணர்த்துமென்று யாதுகாரணம்பற்றிக்கூறினாய்? பிரதிவாதி! சுருதிஸ்மிருதிகற்பசூத்திரங்களில் அநாதி ஆரிஷவசனங்கள் அம்புலிசூடிப்பெருமானையம்மகானெனும்' சொல்லுக்கு இடுகுறிப்பொருளாமுழங்க அவனிடத்தழுக்காறுற்று வேதாதிகட்குமேலானஎந்நூலைச் சமீஇந் நீவிர் பிழைப்பீர்? துராக்கிரகீ! மஹானென்னுந்தனிச் சொல்லை சுருதிகள்ஸ்மிருதிகள், கற்பசூத்திரங்கள், புராணங்கள், ஆகமங்கள் முதலிய அநாத ஆரிஷவசனசதகோடிகள் அஷ்டமூர்த்திக்கமைந்த எட்டுநாமங்களில் சேர்த்திட்டு விநியோகித்துவருவதை நீவிரறிந்திலீரோ? அங்ஙனமே மஹானென்னும் சொல்லையும் மேற்கண்டபிரமாணங்களும் கோசாதிகளும் அவன் பெயரேயெனத்தணிந்தோதுதலைக் கேட்டடங்கினீரில்லை. அந்தோ 'மகாதேவனாகலாம். அவன்மகானா

(1) சதபதமெனவழங்கப்படும் வேதப்பகுதியில் அஷ்டமூர்த்திபிராயணத்தில் உள்ளது.

தல் கூடாதென்று வாதித்த நுமது புத்திநுட்பத்தை யாதுரைப்போம். மேற்காட்டிய நியாயங்களாலும் பிரமாணங்களாலும் மகான் மகாதேவனென்ற இரண்டு சொற்களுக்கும் அவ்வொருவனே பொருளாயமைவதால் யாம் கூறியதேதும் குறையுறாதென்க. நிற்க இனிப் போதாயனகற்பகாரர் 'இதி மகாதேவன் மகாபுருடன் இவர்களை நாடோறும் பூசிக்கும் வழிபுகல்வா' மென்று மகாதேவனென்னும் பதத்தால் ருத்திரனைக் குறித்ததுபோல, இரண்டு பக்கத்துமுள்ள மகான் என்னுஞ்சொல்லுக்கு சிவன் அல்லது விஷ்ணு பொருளெனத் துணிந்திடவேண்டி தேவன் புருடனென்னும் சொற்களை முறையே கூட்டித் துணியவேண்டியதின்றியமையாதாதலால் ஈண்டு மகான் என்னும் சொல்லிருப்பினும் அச்சொற்சிவபரமெனத் துணிதற்குரிய கருவியாய தேவன் என்னும் சொல்லின்மையால் அது சிவபரமாகாது. மற்று அச்சொல்லை விஷ்ணுவென்னும் பொருளாக்கும் ஆற்றலுடைய புருடனென்னும் சொல்லிருத்தலால் இம்மந்திரம் நாராயணனையே குறிக்கும் எனலுங்கூடாது. சிவபரமாய்த் தொடங்கிய (1) தொடக்கத்துக்கு (உபக்கிரமம்) விரோதித்தலாலென்க. மேலும் மேற்காட்டிய தனித்தமகானென்னும் சொல்லுக்கமையுமிருகுறியாற்றலைத் தொடக்கத்தில் தானே சிவமெனச்சாதிக்கப்பட்ட புருடனென்னும் சொல் எவ்வழியுந் தடுக்காதென்க. அன்றியும் மகாபுருடனென்னும் தொகைச்சொல்லை விண்டுவைக் குறிப்பதன்றி ஈண்டு பகுத்தோதிய புருடனை மகானையென்னும் சொற்கள் கண்ணனைக் குறியாவென்க. இங்கு இரு தனிப்பதங்களாய்க் குறிக்கப்படினும் அதே தொகைச்சொல்லில் அமைந்த இருபதங்களே ஈண்டுமமைந்திருத்தலால் அவ்விண்டுவைக்குறியாவோவெனின், அவ்விருகுறியாற்றலை யெடுத்துக் காட்டும் (2) ஆநுபூர்வி மாறுதலால் பொருந்தாதென்க. மேல் தொக்க வேற்றுமையும் தொகாதவேற்றுமையும் பொருளை வேறுபடுத்துமோவெனின்; வேறுபடுத்துமென்பதை தைவலிய, தைவாநாவி...

---

(1) உபக்கிரமம் = தொடக்கம். இது மீமாஞ்சகர்கண்ட ஓர் முக்கிய பிரமாணம். அஃதென்னையெனில் முதலிற் கேட்கப்படுஞ்சொல் ஒன்று தனக்கு பெருவழக்கிலமைந்த உண்மைப் பொருளைக் கொடுக்கலானும் சொற்களுக்கு கௌணப்பொருள் கொள்ள ஏதுவாய் வேற்சொற்றொடர்பு இதனுடன் முரணும் பொருளை நிச்சயம் விளக்காமையானும் இச்சொல் தன் பொருளில் தன்னிலைபெறுவதற்கு தடையேதுமில்லை. இச்சொற்பொருளுக்கு முரண்பொருள்கொடுக்கும் சொல்லொன்று பின்னரும் மேல் அஃது செவியில்படும் காலத்துத்தானே தமக்கு முரணுமாறு எழுந்த உபக்கிரமச் சொற்பொருள் அறியப்பட்டமையின் அஃது துர்ப்பலம். இதுவிஷயம வேதோபக்கிரம ஞாயமென மீமாஞ்சகர் கூறுவது.

(2) ஆநுபூர்வி = சொல்லமைப்பு.

க்ராமஸிம்ஹ, க்ராமஸிம்ஹ எனனும் சொற்களை யாராய்ந்தடங்குக தேவப்ரிய: தேவர்களுக்குப் பிரியமுள்ளவன் ஈண்டுதொக்கியது ஆரும்வேற்றுமை; அவ்வாறும் வேற்றுமையைக்கூட்டிதேவாநாம்ப்ரிய: = எனின் அது மூர்க்கர்களுக்குப்பெயர். க்ராமஸிம்ஹ: = கிராமத்திற்சிங்கம். இங்குள்ளது ஏழாம் வேற்றுமை இதுவேற்றுமை தொக்கவிடம் கழுதையென்று குறிக்கும். ஆ ஈண்டு தனித்தெடுத்த (1) மகான் புருடனென்ற விருசொற்கள்கண்ணனைக்குறியாவென்று தெளிக. பின்னர் (2) வேதங்களுக்குள்ள விலக்குவிதிபற்றி ஈண்டு வேற்றுமை தொக்கதின் றெனின், அங்ஙனம் துணிதற்கேற்ற நிருத்தம் முதலிய பிரமாணங்க ளகப்பட்டாமையின் அது பொருந்தாதென்க. மேலும் அவ்விரண்டுசொற் கிடையூறாய் (3) முன் பின் சொற்கள் மாறியமைக்கப்பட்டன. இதன் விரிவை (4) மேலே காட்டுவோம். இவ்விடத்து மகான் புருடனென்னு மிருசொற்களும் பரசிவன் நாமதேயங்களாகவே அவற்றுள் ஏதேனுமொன்றைக் காரணவாற்றல் கொண்டு விசேடணமாக்கி மற்றொன்றை யிடுகுறியாகக் கொண்டு விசேடியமாக்க வேண்டும். இருட்கப்பால் = ஈண்டு இருளென்றது அவித்தியாமயப் பிரபஞ்சத்தையே இருளெனவழங்கப்பெற்ற பிரகிருதியில் தோன்றிய இவ்வுலகத்துக்கப்பால் அதாவது இஃதொழிந்த பிறகு முக்குணங்கடந்த முத்திநிலையிலென்பது கருத்து. 'ஆதித்தவண்ணனை 'ஹிரண்யவர்ணன்' என்பதாதிச் சுருதியில் கூறப்பட்ட பொன்னார்மேனியனை 'உலக சொற்பன மொழிந்தவிடத்துத் தோன்றும் பொன்வண்ணமேனியனே புருடனென்றறிக.' என்ற மநுவின் கூற்றாலும் 'புருடன் கிருஷ்ணபிங்களன்' என்ற சுருதியாலும், 'பவளநிறம்போன்ற பாதியும் இந்திரநீலம் போன்றமற்றொருபாதியும்' என்பதாதிய (5) யுக்தவசனங்களாலும் கடவுளது திருமேனி கனகவண்ணமென் றேற்படுதலா லென்க- 'இருட்டு' கரியநிறத்துக்கு, அப்பால் = மற்றோர் பக்கத்தில், ஆதித்தவண்ணனை = கதிரவனிகர்த்த நிறமுடையானை அதாவது செம்பவளவண்ணனென்பது கருத்து. 'காலைக்கதிரவனிக' ரெனப்புராணங்க ளோதுதலாலெ

---

(1) தனிச்சொற்களுக்கு வேற்றுமைத்தொகையில்லாது ஒருபொருளை உணர்த்துமாற்றல் வழக்கிலும் இலக்கணத்திலும் இல்லையென்பது கருத்து.

(2) வேதங்களுக்குள்ளவிலக்கு = இதனால் வேதங்களில் எல்லா விதிகளுக்கும் விலக்குண்டென்பது ஏற்பட்டது.

(3) முன்பின் = மஹானை புருடனை யென்று இருக்கவேண்டியது. அங்ஙனமின்றி . புருடனை மஹானை யென்று படிக்கப்படுகிறது.

(4) மேலே = உபநிடதத்தின் இறுதியில் மற்றவர் கூறியவதக்கனை மறுக்குமிடத்தென்பது கருத்து,

(5) அபியுக்தர் = ஜகத்குருசங்கரமுனிவர் சிவபுஜங்கத்தில் 

ன்க. இங்கு நீலலோகிதமெனக்குறிக்கப் பெற்றவித்தியாசபள விருபாட்சமூர்த்தியேயிரவும்பகலுமிருபாலாகுமென்றிவ்வுடநிடதவித்யாசபளவிருபாட்சமூர்த்தியேயிரவும் பகலுமிருபாலாகும்'என்றிவ்வுபநிடதவிறுதிப்பொருளாதலாலென்க அல்லது 'இருட்டு' முக்குணங்கட்கும்அப்பால், ஆதித்தவண்ணனை—சுத்ததத்துவனை அல்லது 'இருட்டு'சுழுத்தியவத்தைக்கு, 'அப்பால்'அவஸ்தைகடந்தவிடம்,'ஆதித்தவண்ணனை'காயித்திரிப்பொருளாய்க் (க) காரியோபாதிகடந்து கதிரவன் மண்டலத்திலங்கும் இரணிய வண்ணமூர்த்தியை,இன்னுமனேகபொருள்கள்'பிரமாணங்களுக்கேற்பவூகிக்கலாம்.'யானறிவேன், இதுவேதவாக்கியமாதலால் வேதந்தானறிவேனென அப்பொருளைக் குறிக்கின்றமையின், அநாதிநித்தியஸ்வயம்புவான வேதத்தானன்றி வேறெவற்றானும் அறியப்படமாட்டான் என்பது பெறப்பட்டது. மேலும் இச்சூக்தம் ஸ்ரீமந்நாராயணன் திருமுகமண்டலத்திலுதித்தது ஆதலின், அவன் திருவாக்காயமைந்த இவ்வாக்கியம் யானறிவேனெனத்தமதறிவை விளக்கினமையால் இவ்வாக்கியத்தை முதலிலெடுத்தோதிய முகுந்தனே சிவஞானச் செல்வச் செருக்குப் பெற்றானென வேற்படுகின்றது. ஆதலாற்றான் (1) விஷ்ணுசூக்தத்தில் 'ஓ விண்டு நீபரமன் பெருமையறிவாய்,' என்று கூறியதூஉமென்க. மேலும் 'இதனால் மந்திரத்தைக் கண்டவர் தமதனுபவத்தைக் கூறுகின்றார் என்றார் சாயணாசாரியர். அதுகொண்டே அப்பையதீட்சிதஸ்வாமிகள் (2) 'அளவிறின் பெருமையறியவு நின்றாட்கழிவிலா வன்பு செய்திடவும், தனமகேரடுத்துன்னருச்சனை யாற்றிச்சாலநின் திருவருள்பெறவும், வளமலிபுலியூரம்பலத் தரசேமலர்தலையுலகினுட்சுருக்கருளர்தமாய்ப் படலைமார்புடை யண்ணலொருவனே வல்லனன்றே, என்றார். புராணமும் வேதவியாசன் சாக்ஷாத் நித்தியனான நாராயணனே வேறெவன் பரசிவதத்துவத்தைப் பரிபூரணமாயறிவான்' என்றது. மாபாரதமும், தேவர்களுக்குத் தேவனும் எங்கும்தோன்றி யழியாதளவிலாப்பெருமைபெற்ற அம்புயலோசனன் அகிலருபனுமேயேகநாயகனீசனே யென்றறிந்து அவனையிலிங்கத்தில் பூசிக்கின்றான் என்று வெளிப்படையாய் ஸ்ரீமந்நாராயணனுடைய சிவஞானப் பெருமையை வியந்தோதியது. இனிவேதமும, அல்லது வேதநாயகனான விண்டுவுந் தாமோசிவஞானிகள் என விளங்குகழின் 'அவ்வளமன்று; அந்தண்ணாற்பயின்று அந்நாரணன் திருவடிதொ

(1) இங்கு எடுத்தோதிய விஷ்ணுசூக்தம்போல் இருக்குவேதத்திலும் 'விஷ்ணு பரமனை யறிந்தான் பிறந்தவருள் பெரியவன் மூன்றாவதைக் காப்பான்' என்றுளது. இஃது மூன்றாவதென்றது பௌதிகபிராகிருத கைலாசங்களை தவிர்த்த மகாகைலாசத் திருப்பதியைக் குறிக்கும் என்று உரைசெய்தனர் ஆன்றோர் என்க.

(2) இச்செய்யுள் ஸ்ரீமத் அப்பையதீக்ஷிதஸ்வாமிகள் செய்தருளிய சிகரிணிமாலையின் மொழிபெயர்ப்பில் 'ஸ்வாரூப்யம்விஜ்ஞாதும்' என்ற சுலோகத்துக்குப்பதில்.

முதநல்லுபதேசம் பெற்றவரும் அச்சந்ததியோரும் சிவஞானிகளாவார்கள்' எனக்கூறுகின்றார்.

'எவ்வுருவத்தையும் நாமங்களையும் ஆய்ந்துள' விவேகத்தாற் சோதித்தொழிந்துள்ள தீரன் உண்மையறிந்த முனிவன் கழித்து அந்நாமரூபங்களை ஒழிசது எஞ்சிய எதைப்பணிவான் சச்சிதானந்தங்களைப் பிரமமெனத்துணிந்து வழிபடுவான். அவனே 'ஆய்ந்துளதீரன், என்றவிடம் தீரன் ஆய்ந்துபணிவானென்றதே போதுமானதாக உள என விசேடணமாய்க்குறித்தது உண்மையென்னும் சத்தியமாய் அச்சிவஞானியொருவனே நிற்பானெனக் குறித்ததற்கே யானந்தப்புருடனையறிவேனென்பதால் பரிபூர்ண பிரமஞானமே நாமரூபங்களை ஒழித்து ஆத்மாநந்த நிட்டையிற் சேர்க்குமென்பது பெறப்பட்டது. ஆதலாற்றான் வாச்சியம் வாசகம் கடந்து தன்னறிவாற்றானறிதற்பாலது என்றது புராணமென்க. பாகவதமும் 'ஓ கிரிதரா! உனது பெருமை உலகமாளுந்திக்குப் பாலர்கள், பிரமன், விஷ்ணு மகேந்திரனிவர்களாலறிதற்பாலதன்று', அது முக்குணங்கடந்தது. வேற்றுமையிற்றது. பரபிரம்மப்பொருள் என்று பிரகிருதிசம்பந்தமான முக்குணங்கடந்து நாமரூபத்தின் வேறாய்உள்ள சச்சிதானந்த கனன்சிவனேயென்றுகுறிக்கின்றது. மேற்கூறியபரம்பொருளைக் கேட்டுச் சிந்தித்துத் தெளியும்பெரியோர்(1) பிரமரகீடநியாயத்தால்அவனே யாவரென்பது உட்கருத்து. ஆக இம்மந்திரத்தின்முடிந்த பொருள். அந்தப்புருடனை = வேதாந்தங்களிற் பரிபூரணனெனக்குறிக்கப்பட்டவனை, ஆதித்தவண்ணனை = காயத்திரிவல்லபனை, ஆதித்தாந்தர்யாமியை, பொன்னார்மேனியனை. மகானை = மஹானென்னும் பேர்பெற்ற பரமசிவனை, யான் = யானென்னுமறிவுக்கு விஷயனாய் (ஸ்வஸ்வரூபனாய்) இருட்கப்பாலறிவேன், எதை = எப்பரம்பொருளை, எவ்வுருவத்தையும் = நாமங்களையும், ஆய்ந்து = ஏகதிருஷ்டியாய் விசாரித்து, கழித்து உள தீரன் = உண்மைமாத்திரையாய் நின்றயோகி பணிவான் = அத்துவிதானந்தம் எய்துவான். அப்புருடனையென்று கூட்டிப் பொருள்படுத்துக.

---

## I?-ம் மத்தியாயம்

—— (o) ——

மேற்கண்ட திருமாலன்றிக்குறித்தற்குரிய சிவஞானி பிறிதொருவரில்லையோவென வாசங்கைநிகழ மற்றுஞ்சில சிவஞானிகளைக்குறித்தல் காரணமாய் அதன்பெருமைவிளக்கி வீடுகூடும் வழியிதுவெனத்துணிவுகூறுகின்றார்.

பிரமன்முன்னரெவனைக்கூறினன்
இந்திரன்றிசைகளெல்லாமுணர்ந்தவன்

---

(1) பிரமரகீடநியாயம் = இது எறும்புமுதலிய பல்புழுக்கள் வண்டினுழ் பெறுவதைக் கொண்டெழுந்தது.

அவ்விவன் றன்னையறிந்தவன்றானே
அமிர்தனிங்காவானன்றெ (யரிய)
வீடுகூடவழிவேறிலையே.

(இ-ள்.) எவனை = எந்தப்பரமான்மாவை முன்னர் = சிருஷ்டிகாலத்தில். பிரமன் = பிரமதேவன், உடறினன் = ஐயமற்றுத் தம்மிடமணுகியரிஷிகளையுத்தேசித்து இஃதே பரதத்வமெனத் துணிந்து உபதேசித்தார். இந்திரன் = இந்திரனும் உபதேசித்தானென்பது மட்டுங்கூட்டுக. திசைகளெல்லாமுணர்ந்தவனென்பது இந்திரனுக்கும் பிரமனுக்குமுரிய குணமாம். திசைகளென்றது அவற்றிலுள்ளபொருண்மேனிற்கும். இக்குண்மையிது:—ஆதிகாலத்தில் நாராயணனிடம் உபதேசம் பெற்றுச் சிவஞான பரிபூரணனான பிரமதேவன் அப்பரசிவனையே உலகெலாங்கடந்த உண்மைப்பொருளெனத் துணிந்து முனிவர்களுக்குபதேசித்தான். இச்சரித்திரம் ஸ்ரீபுராணம வாயுசங்கிதையில் இரண்டாமத்தியாயத் தொடக்கத்தில் இக்கற்பந்தொடங்கிச் சிருஷ்டியானபொழுது' என்று சிருஷ்டியாரம்பத்தைக் குறித்து 'ஆறுகுலத்துதித்த முனிவர்களொருவருக்கொருவர் பிணக்குற்று இவன் சிறந்தவன், அவன் சிறந்தவனெனப்பெருத்ததோர் சொற்போர் செய்தனர்' என்று ரிஷிகளுக்கு உண்மைத்துணிபுண்டாகவில்லையெனக்காட்டி. 'தேவாசுரர்களால் புகழ்பெற்ற பிரமதேவனெங்கிருப்பான்' என்று தொடங்கிய சிலவசனங்களால் இருடியர் பிரமலோகஞ்சென்று அவனைக்கண்டு உண்மை தெளியவேண்டி அவனைப்பணிந்து ஓ பிரமதேவா பெருத்ததோரிருளால் சூழப்பட்டோம். இச்சம்சாரத்தில் வெகு துயரமுற்றுப்பல விவாதங்களைச்செய்தும், உண்மையஃதென்றறிந்தோமில்லை' என்று தமது அஞ்ஞானநிலைமையைத் தெரிவித்துப் பிறகு 'எப்புருடன் யாம்காணும் பொருள்கட்கெல்லாம் மேலாயினான்? எவன் பரிபூரணன்? எவனென்றுமுளான்? எவன் பரமேசுவரன்? எவன் நித்தியமுத்தன்? எவன் விசித்திர கிருத்தியனாயுலகைமுதற்படைத்தான்? எவனிடத்திவ்வுலகமொடுங்கும்? எவனுக்குப்பூதங்கள் தன்வயப்படும்? எவனெல்லாவற்றிக்குமேகநாயகன்? அப்பரமனை யாம்காணும் வழிதானேது' என்று ஓர் வினாநிகழ்த்தி இங்ஙனம் முனிவர் வினவ, பிரமனிளநகை செய்து தேவர், அசுரர், முனிவர் இவர்கள் முன்னிலையிலெழுந்து நின்மனதிற்பரமான்மாவைத் தியானித்து இவ்வினாக்களுக்கெல்லாமொரேவிடையாக 'ருத்திரனே' யென்று உரத்துக்கூறி அங்கமெங்குமானந்த பாஷ்பங்கமழ, அஞ்சலிசேர்த்து அறைவானுயினனென்று பிரமதேவன் விடைபகர்ந்த நேர்மையை விரித்து, பிறகெழுந்தவனிடம் 'சொற்களும் மனங்களும் செல்லாது எவன் பெருமையறிந்தான்? எங்குமச்சமுறு' னென்பன்றாதிய வசனங்களால் கடவாதவாணையுள்ள ஸ்ரீகண்ணபிரானது பெருமையும் சொருபமும் விரிக்கப்பட்டது. அங்ஙனமே பாகவதத்தில் தட்சயக்ஞசங்காரத்திற்பிறகு தேவர்கள் பிரமதேவனைச் சரணமடைந்து அவரிடம் சிவந்த

துவோடுபதேசம் பெற்றதாகக்கூறப்பட்டுள்ளது. அங்ஙன மிந்திர
னும் பிரமதேவன் விண்டுவிடம் உபதேசம் பெற்றது போல
நாராயணனது அபரத்திருமேனியாகிய அகிலமீன்றவன்னையுமாதேவி
யாரிடத்தில் உபதேசம்பெற்றானென்பதைக்கேனோபநிடதம், 'அவ்வா
காயத்தில் ஹைமவதி' உமாதேவியைக்கண்டனன்' என்று தொடங்கி
விரித்துக்கூறியிருக்கின்றது. இதனால் ஸ்ரீமந்நாராயணன், பிரமதேவ
ன், தேவேந்திரன் முதலிய கடவுளர்க்கும் வாஞ்சைசிறப்பும் வள்ளலாய்
வழிபடுங்கடவுளாய் நிற்போன எமது விருபாட்சப்பெருமானேயென்ப
து இனிது பெறப்பட்டது. இவ்விஷயத்தை அத்வைத வித்தியாசாரி
யசுவாமிகள் சிகரிணிமாலையின்கண் 'உன்றனையெதிரேகண்டு மம்புய
த்தோனுணர்ந்திலன்மால் சொலவுணர்ந்தான், வென்றிவெள்ளானைப்பா
கனுமுமையாள் விளம்பிடத்தேர்ந்தனனிமலா, மன்றலந்துளவோனய
ன் முதலுன்றன்மயக்கறுத்துணர்ந்தனரென்றால் இன்றனையேழைமா
னிடரறியாவெண்பதுமாயவேண்டுமேதோ' என்று கூறியருளினர். அ
வ்விவன்றன்னை = மேற்கண்டபெருமைபொருந்தியவனும் இவனென்னும்
அறிவுக்கு விஷயரூபமான ஜீவரூபனாய் நின்றவனை 'அறிந்தவள்'
தானேயென்றறிந்தவன், 'எவன்வேறாய்த் தேவதையை யுபாசி
க்கின்றான்? அதுவேறுதான்வேறென்று அவனுண்மையறியான், அவ
ன் பசுப்பிராயன், என்றுசுருதி கூறுதலாலெனக. இங்கு= இவ்விடத்
துத்தானே, பிரமத்தையபரோக்ஷமாயறிந்தவனுக்குப் (1) பராந்த
காலமுதலிய காலங்களும் கைலாச முதலியவிடங்களும் அவாவப்ப
டாவெனக. அமிர்தன் = முத்தன் சிவரூபனென்பது கருத்து. இது பு
தியதேதுமில்லை. அவித்தியை நிவர்த்தி ஒன்றே யிங்கு முத்தியென்று
பசரிக்கப்பட்டது. மேல் இங்கு அபரோக்ஷஞானமின்றி மற்றேதும் வீ
டுபெற வழியாதென்று கூறுகின்றார். ''விடுகூட வழிவேறில்லையே' யெ
னவேறுகர்மமுதலியன 'வீடுகூட வழியில்லை'. கூறியகாதென்பது கருத்
து. அதனாற்பேரறிவேயன்றி வேறெதுவும் வீடுபெறுதற்கு வழியா
காதென்பது பெறப்பட்டது. இவைகளாலிம்மந்திரத்தில் முடிந்த கரு
த்து:— எவனை = எந்தருத்திரமூர்த்தியை, முன்னர் = சிருஷ்டியுபக்
கிரமகாலத்தில் இசைகளெல்லா முணர்ந்தவன் = எல்லாப்பொருள்க
ளினுண்மையறிந்தவனாகிய, பிரமன் = பிரமதேவன், கூறினன் = ரிஷி
களுக்கு உபதேசித்தனன், இந்திரன் = தேவேந்திரனும் (எதை) அறிந்தவ
னாயினனென் றுகூட்டுக. அவ்விவன்றன்னை = முற்கூறியஇலக்கணம்பெ
ற்றவனும், ஜீவஸ்வரூபமானவனை, அறிந்தவன்தானே தம்முட்கற்
பிதமாய பிரபஞ்ச மொழியச் சேதனன்மட்டுமிஞ்சி, இங்கு= இப்பேர
றிவுண்டாய சரீரத்தின் கண்ணே, அமிர்தன் = முத்தனாக (சிவரூப
ன்) ஆவான் = விளங்குகிறான். அன்றே = அவ்வபரோட்ச ஞானத்
தையறிந்தவக்கணத்தே. (அரிய) விடுகூடவழிவேறில்லையே = அப்பேர
றிவின்றி வேறெதனாலும் வீடுகூடாது என்பது.

(1) பராந்தகாலம் = இது பிரம்மதேவனுடைய ஆயுள்முடிவைக்குறிக்கும்

## 18-ம் மத்தியாயம்

—— (○) ——

மேற்குறித்ததேவயாக ரூபகத்தை உபசங்கரிக்குமுகத்தால் அவ்வேள்வியைச் சொற்சுருக்கமாகக் கூறுகின்றார்.

யக்ஞனால்யக்ஞனைப் பூசித்தனர்சுரர்
அத்தருமங்களாதியிற்றோன்றின
அப்பெரியோர்சுவர்க்கத்தெய்தினர்
சாத்தியரமரர்முன்னுளராண்டே.

இ—ள். 'சுரர்' முற்கூறியபிரஜாபதிமுதலியோர், யக்ஞனால் = முற்கூறியவிராட்டென்னும் புருடனால், யக்ஞனை = யக்ஞகர்மத்தாலாராதிக்கப்படும் பரமேசுரனை, ருக்வேதிகளால 'மேதபதி' என்றும் யஜுர்வேதிகளால் 'அத்துவரராஜன' என்றும் குறிக்கப்பட்ட பரனையென்பது கருத்து. 'பூசித்தனர்' ஆராதித்தனர் 'வேள்வியியற்றிய‌த யஜ்ஞியாராதிக்கவே இல்லையென்ன வேள்வியே ஆராதனையாகாதெனக. இதேயாகத்தை, 'எந்தப்புருடனென்னும் அவிசால் என்பது முதலிய மந்திரங்கள் விதித்தன. அங்குபுருடனென்னும் சொல்லாலும் இங்கு யக்ஞனென்னும் சொல்லாலும் குறிப்பிடப்பட்டவர் விண்டுவே, அவனையக்ஞசப்தத்தால் விவரிக்கப்பட்டவர், யக்ஞேசுவரசப்தத்தால் பரமேசுவரனை விவகரிப்பதுபோல், வேதங்களிலெங்குஞ்சாதாரணம். ஆதலாற்றான் விராட்டை விண்டுவென்று சாதிப்பது ஒவ்வுமாறு காண்க. அற்றேல், யக்ஞனையென்றவிடத்துள்ள யக்ஞனென்னும் சொல்லும் விண்டுவைக்குறிக்காதோவெனில், அற்றன்று. உலகத்தில் ஒருகண்மத்தால் பூஜிக்கப்படுபவனும், அதற்குக்கருவியாய் நின்றவனும் ஒருவனாதல் கூடாது. ஒருசமயம் யக்ஞனையென்றவிடத்து யக்ஞனென்பவன் விண்டுவாய், யக்ஞனால் என்றவிடத்துக் கருவியாய் நின்றவன் ருத்திரனாமோவெனில், ஆகான். புருடன், சகத்திராடசன், 'ஆயிரங்கண்ணனென்) ஈசானன்' மகான்முதலிய சொற்களால் இவ்வுபநிடதம் முக்கியபொருளாய்க் குறிக்கப்பெற்றஈசானனீண்டு யக்ஞக்கருவியாயமைதல் கூடாமைபற்றியும், முன் பிறந்தவனெனக்குறிக்கப்பட்டும்' 'எந்தப்புருடனென்னும் அவிசாலென்ற விடம் யக்ஞக்கருவியான அவிசாய் ஓதப்பட்டும் உள்ளவிண்டுவே யீண்டுக்கருவியாயமைத லுசிதமாதலாலுமென்க. மேல், தேவர்களியற்றிய வேள்விதியா ரூபமோவென ஐயநிகழ, அங்ஙனமன்று என்று 'அத்தருமங்களாதியிற்றோன்றின' வென்பதாற் கூறுகின்றார். 'அத்தருமங்கள்' தேவரியற்றிய மானசயாகத்தில் யக்ஞக் கருவிகளாய் நின்றபிரபஞ்சவிவகாரக்கருவிகள், 'ஆதியிற்றோன்றின' சிருஷ்டிகாலத்தமைந்தனவாயின. அத்தேவர்கள் உலகசிருட்டிசெய்யவிரும்பி அவ்வுலகசிருஷ்டியை ஒருயாகமாகமனதாற்பாவித்து அதில் மேற்கண்டவிராடடெனனும்புருடனைப்பசுவாகப்படுப்பித்தமற்றையதே

வர்களையங்கமாகவாக்கி இவ்வுலகசிருஷ்டிவிவகாரத்தையேநடத்துமுக மாய், எல்லாவற்றையு மீசனடிசேர்த்துப்பூசையாகப்பாவித்தனர். அவ்வ வ்வான்மாக்களுக்கேற்பவிதிக்கப்பட்டவிதிவழுவாதுநடத்தலேசேதனர்க குச்சுதர்மமென்க. மேற்கண்டதேவர்களியற்றிய மானசயாகத்தின் பய னைக்கூறுகின்றார். 'அப்பெரியோரே' அம்மானத யாகஞ்செய்தமகான் களே, சுவர்கத்தை' சுத்தசுகமயமான வீட்டை, எய்தினர் அடைந்தார் கள். அற்றேல், ஈண்டு சுவர்க்கமெனக் குறித்தது இந்திராதி தேவர்கள் வசிக்குமுலகமாகாதோவெனின், அற்றன்று. இஃது உலகபரம்பரை க டந்த உண்மையெஞ்சிய மீட்சியற்ற உத்தமோத்தமஸ்தான மென்கின் றார். 'சாத்திய' ரென்பதால் சாத்தியர் அமரர் = சர்வகர்மங்களாலும் சாதிக்கப்பெற்றசித்தசுத்திபெற்றவரும், அதனால்திவ்யஞானமெய்தி= முன்னுளர்நித்திய முத்தபாசிவ ஐக்கியம்பெற்றவர். 'ஆண்டு உளர்' அ வ்விடத்துளார். இதனால் முன்னர் முத்தர்கலந்த முழுமுதற்பிரான் தி ருவருளைக்கியமே யிம்மானதயாகப் பயனாய் இத்தேவர்களுக் கமைந்தது. இதனால் உபாதிகள் கடந்து அபரோட்ச ஞானமவிந்து வாசனையொழி ந்து சத்திய ஞானானந்தமாத்திரமாய் நிற்றலே முத்தியென வேற்பட்ட து. இப்பெரும் அர்த்தவாதத்தால் பரமேசுவரனை யடைவதற்கு வழியா யும் உலகமரியாதை சாதுர்வர்ண முதலியவற்றைச்சிருஷ்டிக்கு மதிகா ரத்தையேற்றியும், பரமேசுவரனது அம்சமாகப் பாவித்தும் விராட் டை வழிபடவேண்டுமென்றது சொல்லாதமைந்தது.

சுபம்.

பூர்வநாராயணம்.

முற்றும்.

---

உ

## புருடசூக்தம்
## 2-ம் அநுவாகம்.

---

இனி, இவ்வநுவாகமும் முன்னநுவாகத்திற்குறித்த உபாசனையே உபாசகரொளிதிலறியும் பொருட்டு மீண்டும் சுருக்கி வேறுவகைப்படுத்திக் கூறுகின்றது.

புனலின்னிலன்னிரசத்துதித்தான்
விச்வகர்மன்பாற்றோன்றிவிரிந்தான்
அவனுக்குருவந்துவட்டாவாக்குவன்
ஆதியிற்புருடற்கியல்பாயினவெலாம்.

(இ-ள்) பூர்வாநுவாகத்திற் பிறந்தவனென்றும், விராடடென்றும், பிரமாண்டதேகனென்றுங் குறிக்கப்பட்டபுருடன் பரமான்மாவினிடம் நேராகப்பிறந்தானோவெனின், அன்றெனக் காட்டுகின்றார். புனலினென்

பதாதிய ய். 'புனலின், நிலனின், 'இரதத்தின்' அப்பு அன்னமுதலிய பொருள்களை விளக்க, என்பதன் பொருள். ஈண்டு இரசமென்பது விருப்பத்தைக் குறிக்கும் சொல்லாதலின், சத்தசிற்களனிடத்தேற்றப்பட்ட ஆதிசிருட்டி சங்கற்பமே அப்பதப்பொருளாமென்க. ஈண்டு விராட்டெனக் குறிக்கப்பட்டவர் ஸ்ரீமந்நாராயணனேயென்று சாயனாசாரியார் பாஷ்யத்தால் விளங்குகின்றது. எங்ஙனமெனில் 'எவனீண்டு விராட்டெனக் குறிக்கப்பட்டான் இந்நாராயணனென்னும் சேதனனே நீரிலும் நிலத்திலும் பிறந்தானென்றனர். அவனெவனிடம் பிறந்தானென்று கூறுகின்றார். 'விசுவகர்மன்பால்' சகலத்தையும் படைக்கும் ஆற்றலுடைய பரமேசுவரன்பால் தோன்றியவன் எவ்வாறுயினானென்று கூறுகின்றார். தோன்றிவிரிந்தான் = அவனிடத்துத்தோன்றி அவன் கருணைபெற்று அதனுற்சர்வாதிகாரியனானென்பது கருத்து. 'எல்லோருக்கும் ராஜாதிராஜன் விஷ்ணுபிரமமயன் (பிரமத்தினிடத்தில் விவர்த்தமானவன்) மகான்' என்றும் 'சர்வசக்திமயனிவன் (சர்வசத்தியாய பரமேசுவரனது விவர்த்தன்) பிரமத்துக்கடுத்தவன்' என்பதாதிப்பிரமாணங்களை யீண்டநுசந்தானஞ்செய்க. நீரில் நிலத்திற் பிறந்தானென்பதை அதற்கெனப்பிறந்தானெனக்கொண்டு அவன திருமேனியை மஹாபூதகாரணமாகக் கொள்ளலாம். அங்ஙனமாயின் அவன் மூலப்பிரகிருதியாகவேண்டுமேயெனின் 'வாசுதேவன் பராப்பிரகிருதி' என்ற சுருதியினுல் அவன்பிரகிருதி ரூபனெனப்பெறப்படுதலால் அது குற்றமாகாது. அவ்விகாரம் சத்தியமா? அன்றி மிச்சசடாவெனின் அதுவேறு விஷயம். அற்றேல் கடவுளிடந்தோன்றிய விராட்டிடம் அன்னுதிகள் தோன்றி விரிந்தனவெனின், அவை முன்னுள்ளனவா? இல்லனவா? அவையுள்ளனவாயின் தோன்றிடலெற்றுக்கு? இல்லனவாயின் இல்லதெங்ஙனம் வரும்? எனிற்கூறுகின்றார் = ஆதியிலென்று ஆதியிற் புருடற்கியல்பாயினவெலாம். எலாம் = காணக்கூடிய பொருள்களெல்லாம், புருடற்கு = மேற்கூறிய விராட்டுக்கு, (அப்பால் பரமனுக்கும்) இயல்பாயின = அமைந்துள்ளன. அச்சமயம் புருடனிடமொடுங்கி ஒன்றுபட்டு நின்ற உலகம் வேற்றுமைப்படுத்துங் கருவியாய் நாமரூபங்களைத் தாலமாகப் பெறுவதே சிருட்டியென்றுகூறுகின்றார். 'அவனுக்குருவம் தவட்டா வாக்குவன்' என்று அவனுக்கு = எல்லாப்பொருளுந்தன்னுள்ளமையப் பெற்றவனுக்கு. (தவட்டா) ஆதிசிருஷ்டிசங்கற்பஞ்செய்யும் ஈசுவரன் உருவம் = நாமங்களையும் குறிக்கும் ஒருசொல், ஆக்குவான் = சங்கற்பிப்பான் ஈண்டு மறைபிது. அப்பரமனிடத்து ஒடுங்கிச் சுழுத்தி அவத்தையில் எஞ்சிய பிரபஞ்சம் போல் பின்னமென்றாவது அபின்னமென்றாவது துணிந்தோதற்கரிய அநிர்வசனீய நிலைமையினின்ற மாயாபுருடமய சம்சாரம் பரிபாகமெய்தாது மூற்பிரளயத்திலொடுங்கிய அநாதிகன்மப்பிரவாகப் பயன்கள் சேதனனிடம் எற்பட்டொழிதற்கென நாமரூபமயமான சரீராதிகளை அவனருளால் கன்மத்துக்கேற்றவாறு பெறுதலே சிருஷ்டியாதலாலென்க. ஈண்டு தவட்டாவென்றது

எல்லாவற்றையுந் தம்முள் ஒடுக்கிக்கொண்டவனென்று பொருள்கொடுத்து ருத்திரபரமாய் நின்றது. ஒடுங்கியவிடம் உற்பத்தியும் உற்பத்தியான விடமொடுங்குதலு மியல்பாதலாலெனக. 'ஏசிவ' துவஷ்டா இங்குவா' 'எல்லாவற்றையுந் தம்முள் ஒடுக்கினன்' என்பனவாதி வசனங்களாலும் மீண்டு அநேகபதிகளைச் சிருஷ்டித்து எல்லாருக்கும் மேலாய்ப்ரமபதியாய் நிற்கின்ரூன் என்பதாலும் ஏற்படுகின்றது. அதனற்ரூன் ரௌரவம் 'அந்தமாதியென்மனூர் புலவர்' என்று கூறியது. அல்லது முற்கூறிய விராட்டாகிய நாராயணனிடம் சதுர்முகப்பிரமன் உற்பத்தியான வரலாறு இம்மந்திரத்தாற்கூறப்படுவதெனவும் கொள்ளலாம். அங்ஙனமாயின், பொருட் பொருத்தமெவ்வாறெனிற் கூறுதும்:— 'புனலினல் நீரின்கண்ணே, நிலனிலிரசத்தில்' ஜலநிலமுங்கலந்த அண்டததில் உதித்தான்' 'விசுவகர்மன்பால்' ஈண்டுவிசுவகர்மனென்றது விண்டுவை, அவனிடமமைந்த நாமரூபங்களுக்குத் துவஷ்டாவெனும் ருத்திரனே. சங்கற்பகர்த்தாவென்பது முன்போல். ஈண்டு ஏற்பட்டமுறையிது. முற்பிரளயங்களில் தம்முள் ஒடுங்கிச் சுழுத்திபோல் நின்ற இவ்வுலகத்தின்கண் அபரிபக்குவப் பிராணிகன்மங்களுக்குப்பயன் கொடுக்கவேண்டி ஈசுவரனிடத்துச் சிருஷ்டி சங்கற்பந்தோன்ற ஆண்டுநாமரூபங்களெல்லாவற்றுக்குங் கற்பிக்க ப்படுகின்றன. அவனிட மொடுங்கித்தோன்றும் சிதசித்பிரபஞ்சங்களுக்கு மூலப்பிரகிருதியான நாராயணன் விராட்டுருவங்கொண்டு முதலிற்ரோன்றுவான். அவன் புனலில் அண்டத்தைவிடுப்பான் அவ்வண்டத்திற் பிரமதேவன் பிறப்பான். அவனிடமுலகமுறையேதோன்றுமென்பது. இப்பொருளையே மனுஒருவாறுசுருக்கி இஃது இருண்மயமாய் நின்றதெனத்தொடங்கி, அங்குபிரமதேவன் பிறந்தானென்பதுவரையுள்ள வசனங்களால் வெளியிட்டார். இதனல் இம்மந்திரத்துக்கு முடிந்தகருத்து. 'இரசத்து' இரசத்தால் (பரமேசுரஇச்சைபால் ) புனலில், நிலனில்' புனல்நிலமுதலிய பொருள்களுக்குக்காரணனாய், உதித்தான் = உண்டாயினன். ( அவ்விராட்டாயநாராயணன் ) விசுவகர்மன்பால் பரமசிவனிடத்து, தோன்றிவிரிந்தனன், நாலகாமரூபங்களைப்பெற்ருன் அவனுக்கு விராட்டுக்கு துவட்டாருத்திரன் உருவம் நாமரூபங்களை ஆக்குவன் கொடுத்தருளுவன், ஆதியில், புருடற்கு' மேற்கண்டவிராட்டாதிக்கு 'இயல்பாயின' இயல்பிலேஅமையபமைந்துள்ளன'எல்லாம் என்பது, அல்லது புனலில் நீரில், நிலனிலிரசத்தில், கடினதிரவப்பொருள் உடைய அண்டத்தில் உதித்தான் = சதுர்முகன்பிறந்தான், விசுவகர்மன் பால்நாராயணனிடம் மற்றதுமுன்போல்.

2—வது மந்திரம்

'இனி' இம்முறை யறிந்தவரும் சிவனையறிவார். என்றும், சிவஞானமின்றி எவ்வழியிலும் வீடுகூடுவது கூடாதென்றும், மீண்டும் வற்புறுத்திசுவாநுபூதியை நாராயணனே அல்லது சுருதிகூறுகின்றது.

அந்தப்புருடனைமகானையாதித்த
வண்ணனையிருட்கப்பாலியானறிவேன்
அவ்விவன்றன்னையறிந்தவன்றானே
அமிருதனிங்காவானன்றே (யரிய)
வீடுகூடவழிவேறில்லையே என்று

இதுமுன்னனுவாகத்துள்ள கக-வது மந்திரத்தின் பின்னடி இரண்டும்-கஎ-வது மந்திரத்தின் பின்னடிமூன்றும் கூட்டிப்பார்த்தால் பொருள்படும் ஆகவே மீண்டுமிங்குரைத்தாமில்லை.

3—வது மந்திரம்

ஈண்டுமுன்னிரண்டு மந்திரங்களால் சதுர்முகன்சிருஷ்டி கூறப்பட்டது. பூர்வானுவாகத்தில் மானஸமாயதிக்காதிகளில் சிருஷ்டிகூறப்பட்டது. நான்குவருணங்களுடைய சிருஷ்டியுங்கூறப்பட்டது. இம்மந்திரம்முதல் ஒன்பான்பிரஜாபதிகள் வழிதோன்றிய கிரமஸ்ருஷ்டி கூறப்படுகின்றது.

'பிரஜாபதிகர்ப்பத்திலுள்ளே'
சஞ்சரிக்கின்றனன்பிறவாதவன்பல்
விகாரம்பெறுவான் அவனதுவடிவை
உணர்வார் தீரர்மரீசியாதியரே
பிரமர்பதத்தைவிரும்புவர்தாமே

பிரஜாபதி = பரமேசுவரன்; கர்ப்பத்தின் பிரமாண்டத்தில் உள்ளே சஞ்சரிக்கின்றான் = அந்தர்யாமிவடிவாய் நிற்கின்றான். பிறவாதவன் = இயல்பில் பிறப்பில்லாதவன், 'பிறவாதவனென்றே' என்று சுவேதாசுவதரங் கூறுதலாலெனக. 'பல் விகாரம் பெறுவான்' பற்பலவுலகவஸ்துரூபமாக விரிந்து அவற்றிற்கு விவர்த்தகாரணனாகின்றான். அதிட்டானம் விகாரம் எய்தாது அத்தியாசப்பொருள் தோன்றுவதே விவர்த்தமாதலாலெனக. ஆதலால் அவன் பிறப்பிலி என்பதிற்றடை எதுமில்லை. 'உலகத்தில் கயிற்றரவைக்கண்டரண்டோடினவன் அதனுண்மை யறியான். மற்றுண்மையை யாராய்ந்தவனே யறிவான' என்கின்றார். 'அவனது' என்றுதொடங்கி 'அவனதுவடிவை' அவனுக்குவடிவாய்த்தோன்றும் (1) மூலாவித்தையை 'தீரர்' அறிஞர், உணர்வார் = அறிவர் (அவர்) மரீசியாதியரே பிரமர்பதத்தை விரும்புவார் = பிரமராய் மரீசிமுதலிய (2) முனிவர்பதத்தைப்பெறுவார் என்றுலது அல்லது தாமே = தாமேமரீசியாதியரே = மரீசியெனப்படும் சூரியகிரணவழிமேற் சொல்வோராய், பிரமர் பதத்தை = பிரமதேவனுபதேசத்தை, பெருவர் = அடைவார், ஆதலாற்றான் உலகத்தில் இருபுருடர்களே சூரிய மண்டலத்

(1) மூலாவித்தை = ஜீவோபாதி.

(2) மரீசியாதிமுனிவர் = ஒன்பதின்மர்மரீசி, பிருகு, அங்கிரஸ், புலஸ்தியர், புலகர், கிரது, தக்ஷன், அத்திரி, வசிஷ்டர், என்பவர்.

தைப் பேதிபபர். யோகம் நிறைந்த யோகியும் யுத்தத்தில் முன்கால் வைத்தபடி மாண்டவனுமே என்றதொவ்வும். இதனால்அர்ச்சிராதிமார்க்கத்தால் பிரமலோகம்பெற்று அவனுடன் பிரமவிசாரஞ்செய்து முக்தி பெறுவதும் ஓர் முத்திவழி என்றேற்பட்டது.

4-வது மந்திரம்.

முன்மந்திரத்தில் 'அவன் உலகப்பொருள்களாய் விவுர்த்திக்கின்றுன்' என்றதை விரித்து அவனது சிற்சில விவர்த்தங்களைக் காட்டி அவனை வணங்குகின்றுர்.

''யாவனிமையோர்க்காண்டொளிதருவான்
எவன்றேவர்க்குத்தேசிகனுவான்
எவன்றேவர்க்குமுன்னுறத்(தானே)
தோன்றினனுகுமந்தப்பிரம
தேஜஸ்ஸுக்குநமஸ்காரம்மே'என்று

யாவன் இமையோர்க்கு=தேவரீக்கு, ஒளிதருவான்=இதனுல் சூரியன் என்னும் மூர்த்தி குறிக்கப்பட்டது. அவன் பூமியிற்பிரகாசிப்பதும் தேவர்களுக்குச் செய்யவேண்டிய கன்மங்களில் காலத்தைக் குறிக்கவேயாதலால் எவன் இமையோர்க்காயொளிதருவான் என்றதென்க. இமையோர்க்கு ஆண்டு நாதனுய் ஒளிதருவான் என்பதுபொருள். எவன் தேவர்களுக்குத் தேசிகனுவான்? 'அக்னிமீளே புரோஹிதனை என்றமந்திரமறைதலான் இதன்பொருள் அக்னிதேவன்; எவன் தேவர்க்குமுன்னுறத்தோன்றினன்=இவனிரன்; அந்தப்பிரமதேஜசுக்கு நமஸ்காரம். மேற்கண்ட தேஜஸுகளில் எங்கும் நிறைந்துலங்கும் பிரமசொரூபதேஜசுக்கு நமஸ்காரம் என்பது கருத்து. ஈண்டு சாயணமாதவாசாரியார் அவர்கள் 'யாவனிமையோர்க்காண்டொளிதருவான்' தேவர்களுக்குப்பெருமையுண்டாமாறு அவருள்ளத்துதித்து அறிவொளிதருவான், எவன் தேவர்க்குத்தேசிகனுவான் 'பிரகஸ்பதிதேவர்களுக்குப் புரோகிதன்' என்பதனுல் பிரகஸ்பதி, எவன் தேவர்களுக்கு முன்னுறத்தோன்றினன்=ஹிரண்யகர்ப்பன் முன்பிறந்தான் என்னுஞ்சுருதியால் 'ஹிரண்யகர்ப்பன்' என்று பொருள்விரித்தனர். எதுசிதமோ அதுபொருளாகலாம்.

5- 6. மந்திரம

இனிமேற்கண்டிருக்கிறபடிபுருடனைவழிப்பட்ட தேவர்கள்வேண்டுகோளைக்காட்டியதனுல் இவ்வுபாசனைப்பயனைத்தெளிவித்துபசங்கரிக்கின்றுரிரண்டுமந்திரங்களால். அவற்றின்முதல்இருக்கு; இரண்டாவதுயஜுஸு

'பிரமதேஜஸையாக்கினர்தேவர்
ஆதியிலித்கூறினர்மேற்கண்ட
வண்ணமெய்ந்தப்பிராமணனறிவான்
அவன்வயத்திமையோரனைவரும்நிற்பார் என்னும்

அந்தஹ்ரீயும் இலக்குமிதானும்
பத்தினிஎன்னப்படுவார்ன்றே
இரவும்பகலுமிருபாலாகும்
தாரகணங்கள்அவனுருவாகும்
அச்வனித்தேவர்கண்முகமாகுவரே
வேள்விதன்னைக்கொடுத்தி
இதுகொடுமற்றெல்லாங்கொடுதானே என்றும்

இதன்பொருள் யஞ்ஞெனல்எஞ்ஞை என்று பூர்வானுவாகத்தில் குறிக்கப்பெற்ற தேவர்கள், பிரமதேஜஸ்யாக்கினர். பிரமதேஜஸ் பிரம்மஞ்ஞானத்தை அக்கினர் அபிவ்யக்தி செய்வோர் ஆதியில் இது கூறினர் = அப்பிரமத்தைக்குறித்து பிரார்த்தித்தனர். எங்ஙனமெனில் (உன்னை) மேற்கண்டவண்ணம் இச்சுக்தந்துவங்கி இதுகாறும் கூறியவண்ணம், எப்பிராமணன் = எந்தவந்தணன், அந்தணன் என்றது ஈண்டு(1) ஜாதிச்சொல், அறிவான் அறிந்துவழிபடுவான், அவன்வயத்து = அவன் சுதந்திரத்தில் இமையோர் அனைவரும், நிற்பார் = நிற்பாராக. மேற்கண்ட உபாஸனையால் எல்லாந்தானுய சீவன்முத்தனுக்கு இமையோர் வயமாதல் பெரியதோர் வியப்பல்லவென்பது கருத்து. இனி ஒருபுருடனைத்தான் எனலோகம்பாவனை செய்தவனுக்கும் எல்லாம்சமானதெப்படி எனில் கூறுகின்றார். அந்தஹ்ரீயும் இலக்குமிதானும் என்பதனால் (உனக்கு) அந்தஹ்ரீயும் = ஹ்ரீ என்னும் மந்திரமுக்கியப்பொருளாயஉமாதேவியார், இலக்குமிதானும் = இலக்குமிஎனப்படும்ஓர்சக்தியும், அனைதுதடையிலுள்ளாள். மாகேசுவரிசக்திமகாலக்ஷ்மி எனப்படுவாள். அவள் நிறம் கருமை; ஸர்வாங்கம் சுந்தரம்என்றுபுராணங்கூறுதலாலென்க. பத்தினிஎனப்படுவார், பத்தினிகளெனப்படுவார் = சக்திகளெனக்கொள்ளப்படுவார். மேல்சக்தி இரண்டும் சக்தன் ஒருவனுமாகப்பொருள் ஒன்றேயென்றது எங்ஙனமெனில் கூறுகின்றார் 'இரவும் பகலும்' என்று. உனக்கென்பதைமேல் எல்லாவற்றிலும் கூட்டுக. சிவபுராண வாயுசங்கிதையில் 'நீ இரவு' யான்பகல்' எனப்பரமேசுரன் அம்மையை நோக்கிக்கூறிய திருவாக்கின்படி ஈண்டு இரவும் பகலும் இருபாலமைந்த அர்த்தநாரித் திருமேனி உன்னதாகவே, ஒருதிருமேனியிற்றானே சக்திசக்தர்கள் எனறவேற்றுமை கற்பிக்கப்பட்டமையின் பொருள் ஒன்றென்றது வழுவிலை என்று முடிந்தது. ஈண்டு இரவும் பகலும் என்றது ஏகதேசம் ஆகவே உலகத்தில் இரண்டாகத்தோன்றும் எப்பொருளும் சித்து அசித்து ஆண்பெண் ஆதிவிகாரத்திலடங்கிச் சிவசக்திருபமாகும். அவ்விருமைஎலாம் இறுதியில் ஒருமையே எனஎற்பட்டது. இனிகாலமாதி தத்துவங்களும் நீயேஎன்கின்றார் 'தாரகணங்கள் அவனுருவாகும்' என்பதனால். தாரகணங்கள் = அசுவதிமுதலிய நக்ஷத்திரங்கள், அனைத்து உன்னது ரூபம் திருமேனியாம். ஆதலாற்றான்

(1) ஜாதிச்சொல் = ஜாதியைக்குறிக்குஞ்சொல்.

பரம நாராயணர்கள் செய்தசிவஸ்தோத்திரத்தில்இலக்குமிபதிஉன்னைவணங்குவாம், ஹ்ரீபதி உன்னைவணங்குவாம், ஸ்ரீபதி உன்னைவணங்குவாம் என்றும், காலரூபியான காலகாலன்சொரூபத்தைக்குறிப்போம். எதனால் இவ்வாகாயம் நிறைந்தது? உலகம் நிலைபெற்றது? எவற்றுள் அசுவதி பரணி கார்த்திகையின் முதலடி கூடியது மேஷராசி; செவ்வாய்வீடு அது காலரூபியான கண்ணுதலாற்குச்சிரமாம் என்றும், ஈசனே இலக்குமிபதியென்றும் அவனது தலைமுதல் கால்வரை யவயவங்களாக காலசக்கிரமும் கூறப்படுகின்றதென்க. இவை வாமன புராணவசனங்கள் மேல்கண்டவசனத்தில் ஸ்ரீபதி என்பது அதிகம் எதற்கெனில் சுக்லஎஜுர்வேதத்தில் இத்தேயிடத்தில் ஸ்ரீபதி' என்றுபடிக்கப்படுதலால் அதைச் சேர்த்து புராணம் பொருள் கூறியதாயறிந்துய்க. அல்லது ஈண்டு தேவ பிரார்த்தனைப் பிரகரணமாகவே அதற்கிசையய வேறுபொருளும் இதற்குண்டு. எங்ஙனமெனிற்கூறுதும். ஹ்ரீயும் லக்குமியும் = பூமிதேவியும் லக்குமிதேவியும் (அவனுக்கு) பத்தினி = பத்தினிகளாவார். அவன்விஷ்ணுசாருப்யம் பெறுவான் என்றுவது, அல்லது ஹ்ரீ நாணம்இலக்குமி நல்லுருவம் அதாவது அழகு; இரண்டும் பத்தினி = பத்தினியிடம் அமையுமாகவே எவன் உன்னை முற்கூறியபடி வழிபடுவான், அவன்பத்தினி நல்லஅழகுடையாளும் கற்புடையாளுமாகுக என்றும் கொள்ளலாம் பத்தினியென்றது வேதவியல்புபற்றி பத்தினியிடம்எனப்பொருள்தந்ததெனக. ஆதலாற்றான் எவன்வீட்டின் வாசலில் அனேகமதயானைகள் வாயுவேகப்பரிகள், மதிமுகமாதர்கள் இவைசிவபூஜையின் பயன் என்று காந்தபுராணம் கூறியதுகாண்க. இரவும் பகலுமிருபாலரும் = அர்த்தநாரிரூபனைப் ருத்திரசாயுஜ்யம்பெறுவான். தாராகணங்கள் இவனது ரூபம் இதனால் விராடாகாரம் சொல்லப்பட்டது. (ஈண்டுவிராட்டென்றது ஹிரணயகர்பவியூஹமாய் விராட்டையே) அச்வனித்தேவர்கள் முகமாகுவரே ஆதலால்வேள்விதன்னைக்கொடுத்தி = நீ எங்களுக்குவேள்வியை கொடுத்தி = கொடுத்தருள்; அதன்பயனைக்கொடுக்குமென்பது வேண்டப்பட்டது. அவ்விவள்தன்னை = அந்தணரறியவிரும்புவார் வேள்வியால் ஈகையால் தவத்தால் விருகத்தான் என்று வேதமறைதலாலென்க. இதுகொடு இம்மைப்பயனைக்கொடு மற்றெல்லாங்கொடு மற்று இம்மைக்குவேறாய் எலாம் எலாமாகும் பரம நிலையை; அதாவது எல்லாம் கடந்த ஏகநிலையைக்கொடு தானேதன்னியலைக்கொடு; எல்லாமன்றோ ருத்திரன்; புருடனன்றோ ருத்திரன்; என்பதாதி பிரமாணத்தால் அவனே எல்லாமாக, எல்லாமாய அவன் சொரூபவிளக்கத்தைக் கொடுக்கவல்லானென்றும், அவனிலும் வேறாய பொருளிலையாகவே அதே வேண்டற்பாலதென்றும், எல்லாமாகிநின்ற ஏகான்மானந்தத்தைத் தவிர மக்கள் பெறவேண்டியபேறு வேறிலையென்றும் குறித்திடற்கேயெழுந்த எமது வேதாமாதா கருணைகூர்ந்து இறுதியில் ஆன்மலாப பிரார்த்தனையமைத்து பூர்த்தியாயினள் என்றது.

சுபம் பூர்ணம்.

இங்ஙனமிருக்க யமுனைத்துறைவர் சாதித்தருளிய தோத்திரத்தினுள்ள 'யாவன் புண்டரீகநயனன், யாவன் புருடோத்தமன்' என்று தொடங்கிய செய்யுளை யுரைசெய்த ஆசிரியர் வேங்கடநாதர் இப்புருடசூக்தத்தை நாராயணபரமாகச்சாதிக்கவெழுந்து, கட்டப்பட்டுளெட்டு எதுக்களைத் திட்டஞ்செய்தது வீணேயோவெனின், என்செய்வோம்; ஸ்ரீகண்டவித்தியாகுரு ஸ்ரீசிவாத்வைதவித்யாபரமாசாரியர் விதண்டவாத சண்டபாஷண்ட சண்டமாருதமாய ஸ்ரீமத் அப்பய்யதீக்ஷிதசுவாமிகள் அன்றே அவைகளை நியாயதண்டங்கொண்டு புடைத்து வெற்றிக்கொடிநாட்டினராதலின் மீண்டுமவைகளையெடுத்து ஓதுதல் வேண்டுவதன்று. ஆயினும் ஒருவாறு இவ்வுபநிடதபாஷ்யத்தைப் படிப்போர் உள்ளத்தினின்றும் கல்மஷமற்றுக் கறைகண்டன் திருவடிகளில் பேரன்பு செலுத்தும்படி அவைகளைச் சுருக்கி மறுப்பாம். ஏது-புருவென்னு மிச்சரீரத்திற் சயனஞ்செய்யும் ஹரியைப்புருஷன் என்பது (1) சகரத்தை ஷகாரமாகத் திருத்தி வழங்குகிறார்கள் என்றும், அங்ஙனமே இப்புருடசப்தம் வாசுதேவனிடம் நிலைபெறுமென்னும், அப்புண்டரீகாக்ஷனையன்றி எவன் புருஷசப்தத்தைப்பெறுவானென்றும் அதே வாசுதேவன் சாக்ஷாத் புருடனெனப்படுவானென்றும், பகவான் என்னும் சொல்லும், புருஷன் என்னும் சொல் அடைசொல்லும் வேண்டாது வாசுதேவனை விளக்குவனவென்னும் பல புராணவசனங்களிருத்தலால் புருஷன் என்னுஞ் சொல் விண்டுவுக்கே யமைந்த திருநாமம். இப்புருடசூக்தத்துக்கு புருஷனே பொருளாதலால் இச்சூக்தமும் அவனையே குறிக்குமென்பது. அதன் மறுப்பு: மேற்கண்ட புராணவசனங்கள் ஸ்ரீமந் நாராயணனே புருஷபதப்பொருளென விளக்கினும் அவை அவ்வப்பிரரணங்களிலே மட்டில் அப்புருடனென்னும் சொல்லை விட்டுணுபரமாக்க வாற்றலுடையனவன்றி எங்கும் அச்சொல்லைப்பொருளாக்க வாற்றல் பெற்றில. 'புனல்கள்ன்றோ' என்று தொடங்கியவர்த்தவாதம் 'ப்ரஷ்டம் ப்ருஷம்' என்னும் சொல்லை ரதந்திரமென்னும் சாமத்துக்குப் பெயராக்கி ஏகதேசப்பிரகரணத்தின்மட்டி லொழிந்ததுபோல இதுவுமாகுமென (2) மஹாசாரியரவர்கள் அருளிச்செய்தனர். ஈண்டு பரமேசுவரன் புருஷசப்தப்பொருளாதற்கு 'புருஷனன்றோ ருத்திரன்' என்பதாதிப்பல சுருதிவசனங்களை யெடுத்து, வல்லந்தோமாகையால் இப்புருடனென்னும் சொல்லுக்கு ருத்திரனும் பொருளாகுந்திறனுடையில்லை. புராணவசனங்களால் விண்டுவும், சுருதிவசனங்களால் ருத்திரனும் பொருளாய் நிற்றலின் ஈண்டு யாரை முக்கியபொருளாகக் கூறலாமெனின், வைதிக விசாரத்தில் வைதிக விசாரமே பிரதானமாவது உசிதமாதலால் சிவனே பொருளெனக்கூசாதுரை. அசிதென்னவென்று மீண்டும் பூர்

(1) சக்கரத்தை இரண்டு கட்டிய ரீ (புருச) 'ஷ'வாக வேண்டுமதை, புருஷ [illegible] தாலென்க

(2) மகாசாரியர் ஸ்ரீமந் அப்பய்யதீக்ஷிதர்.

வபக்ஷி வினவின், 'ஆயிரங்கண்ணன்' என்பதுடனிகழ்தலாலென்றுவற்புறுத்துக. அச்சொல் இந்திரனையும் குறிக்குமே யென்றால், புருடனென்னும் சொல் மனிதனைக் குறிப்பதுபோல் அது இங்ஙனம் பயன்படாதெனவும் எம்பிரான் பெயராய ஈசானன் என்னும் சொல் எங்கள் பட்சத்தில் வற்புறுத்தி நிற்குமென்றுணர்க, என்பனகாண்க.

(2) 'மேல் மகாதேவனுக்காதல் மகாபுருடனுக்காதல் நித்தியபூஜாவிதியை விரிப்பாம்' என்றெழுந்த போதாயனசூத்திரங்களில் விண்டுவின் பெயராயமைந்த மகாபுருடசப்தம். இச்சூத்திரத்தின் நடுவே காணப்படுவது அதையுமுற்கூறிப்போந்த ஏதுவைக்கொண்டே மறுத்தனர் ஆசிரியர்; உண்மையில் மகாபுருஷனென்னும் தொகைச்சொல் நாராயணனைக்குறிப்பதாய் வழங்குவதேயன்றி மகான் புருஷனென்ற விருசொற்கள் அவனைக்குறிக்கும் என்பதிற்பிரமாணமில்லை, அவ்விருசொற்களும் தனித்தனியே பரமேசுவரனைக்குறிக்குமென்பதற்குச் சுருதி, ஸ்மிருதி, புராணங்களிலிருந்து பலபிரமாணங்களைக்காட்டினும். இச்சூத்திரத்திலோ மகான் புருடன் என்ற விருசொற்கள் தொகாநிலையாய்த் தனித்து நிற்பனவேயன்றித் தொகையின்பாற்பட்டில. தொகைச்சொல்லின்கணமைந்த நாராயணபரவாற்றல் தனிச்சொற்கணமைந்த சிவபரவாற்றலைத் தடைபடுத்தாதென்றோம். புருஷன் என்னும் தனிச்சொல் மேற்கண்ட புராணவசனங்களால் விஷ்ணுவினிடத்தும் 'அவன் முதற்சரீரி அவனே புருஷனெனப்படுவான்' என்றசுருதியாற்பிரமதேவனிடத்தும், யாம்காட்டிய பல சுருதிவசனங்களால் ருத்திரனிடத்தும் விநியோகிக்கப்படுதலால் அது பொதுச்சொல்லாகின்றது. இனி 'இலக்கணவாணைகடந்து தொகையற்ற விருசொற்களும் முறைபிறழ்ந்தோதப்படினும் ஒருபொருளையுணர்த்தும்' என வீம்புபேசிடின் அது சிறிதும் பிரமாணமற்ற சுசுவிவாதமேயாதலால் அவை ஆன்றோரவைக்கணிலை பெறாவென்க. உலகத்திலெங்கும் தொகையற்ற பலசொற்கணிறைந்தவோர் வாக்கியம் ஒரு பொருளினிடுகுறியாற்றலைப்பெறுமென்பது இப்பூர்வபட்சியார் கண்ட நவீன சித்தாந்தமேயன்றி மற்றெவரும் ஒப்பபற்பாலதன்று. (1) வாக்கியத்திற்கே பொருளையுணர்த்துமாற்றலுண்டென்று கூறுவார் மதத்திலும் அது இடுகுறியாற்றலாவதில்லை. மேல் அகண்டவாக்கியமே பொருளுணர்த்துமாற்றலுடைத்தென வாதிப்போர் மதத்தில் எல்லா வாக்கியங்களும் அவயவமற்ற வகண்ட வாக்கியமாதலால தொகைச்சொல்தனிச்சொல் என்பனவாதி விவாதம் அவர்கட்கில்லை. ஆதலின் தொகையற்று முறைபிறழ்ந்தமைந்தசொற்களுக் கிடுகுறியாற்றலில்லையென்பது பசுமரத்தாணியென நாட்டப்பட்டது. ஆகஈண்டு முறைதவறிக்கூறிய புருடன் மகான் என்னுஞ்சொற்கள் யாண்டும் அவ்விண்டுவைக் குறியாவென்க. அதுகொண்டு இச்சூத்திரத்தை விண்டுபரமாக்க முயல்வோர் முயற்கோடுகொண்டுபோர் செய்யப்புகுந்ததை யொப்பினரென்க.

---

(1) இது வையாகரணமதம்.

தலாற்றான் 'பிறந்தது பங்கத்தில்' என்பதாதிச்சொற்றொகுதிகள் தாமரை முதலியவற்றைக் குறிப்பதில்லையென்க. இவ்விதமேன்? வீண்பிடிவாதஞ் செய்கின்றீர் தொகையில் சொற்களும், தொகைச்சொற்களும் பொருண்மட்டில் ஒன்றுபட்டிருந்தால் அத்தொகைச்சொற்கணமைந்த இடுகுறியாற்றலே இத்தனிச்சொற்களினும் உண்டென்பதினால் உமக்கு வந்தகெடுதியென்ன? எனில்; வேறேதுங்கெடுதியில்லை; தாமரை முதலிய பொருள்களன்றிச் சேற்றிற்பிறந்ததெனப்பொதுத்தன்மை நோக்கிக் குறித்தற்குச் சொல்லற்றுப் போமென்பதே. அச்சொற்களும் பொருளொற்றுமைபற்றிப் பங்கயத்தையேயுணர்த்த நேரிமொதலாவென்க. இனித்தொகாதும், முறைபிறழ்ந்தும், தொடர்பற்றும் உள்ள சொற்களும், தாம்தொகைச் சொல்லாம்வழிபெறும் இடுகுறியாற்றலைப் பெற்றுநிற்குமென விதண்டை பேசுவீரேல விவாத கம்பீர! நீவிர் வாக்கியங்களைப்பொருள் படுத்தக் கண்டவிவ்வற்புதவழியை என்சொல்வோம். இவ்வவஸ்தை காரணஇடுகுறிச்சொல்லுக்கோ அல்லது இரண்டுக்குமோ? எங்ஙனமாயினுமாகுக. க்ராமஸிம்ஹ (க்ராமஸிம்ம) இச்சொல் தொகையாம்வழி கழுதையைக்குறிக்கும். ஸிம்மத்தைக்கிராமத்தில் கண்டேன். கிராமத்தில் சிம்மத்தைக்கண்டேன் (ஸங்கிராமஸிம்மன்) என்பதாதிவாக்கியங்களில்கிராம, சிம்மஎன்ற இருசொற்கள் தொகாதும் முறைபிறழ்ந்தும் ஏகதேசமாயும் நிற்றலால் அவை நும் இடுகுறிக்கழுதையை குறித்தனவா? தேவாநாம்ப்ரியஃ தேவாநாம்பிரியஃ, என்பது தொகைச்சொல்லாம்வழி மூர்க்கனைக்குறிக்கும் தேவர்களுக்கிலன்பிரியன் பிரியன் தேவர்களுக்கென் என்பனவாதிவாக்கியங்களில் தேவர்களுக்குப்பிரியன் என்னும் இருசொற்கள் நும்இடுகுறிமூர்க்கனைக் குறித்தனில்லை. சாரமேயமென்னும் சொல் பகாப்பதமாய்நின்று சுவானத்தைக்குறிக்கும் இனிசாரத்தால்(பலத்தால்) மேயன் = அளவிடக்கூடியவன் இவன் என்பதில் நும்சார, மேயஎன விரண்டும் சேர்ந்து நும் இடுகுறி நாயைக்குறித்ததில்லை. இங்ஙனமேயயாஜாக (யத்ரஜாதன்) புங்கவன், ஸத்ருணம் முதலிய சொற்களும் முட்டாள், முரட்டுக்காளையாதி பொருள்களைக்குறிக்குமென்பது எங்கு கண்டீர்? ஓகோ எ பண்டித! இச்சத்தார்த்தவிசார சாமர்த்தியமெங்கு கற்றீர்? அறிஞர்காள்! அனேககோடி ஜன்மசஞ்சித மகாபாபபரிபாகத்தால் இவரைப்பிடித்த பரசிவ பரதத்துவவித்துவேஷ மகா பிசாசாவேசப்பயனில் ஓர் சிறிதிது வென்றறிந்து ஒதுக்கிடுக. ஐயன்மீர்! ஈண்டு 'மகாபுருடன்' என்னும் சொல்லிருப்பதாக நினைத்தது கனவே. மற்று, முறைபிறழ்ந்து தொகாது புருடனை மகானையென்றேயிருக்கின்றது. இப்புருடசூக்தத்தை விஷ்ணு பூசையில் விநியோகித்திருத்தலால் அதற்கேற்பயாமொருபொருள் கூறிடின் அதை நீர்தடுக்க வல்லீரோ எனின், யாமதையுந்தடுக்க வல்லேமல்லேம்; அச்சூக்தம் இவர்கொண்டவழி இனி இவர்க்குக் கொடுக்குநற்பயனாய நரகத்தையுந்தடுக்க வல்லேமல்லேம். எங்ஙனமெனிற் கூறுதும். ஈண்டு மகாபுருடனென்னுந் தொகைச்சொல்லுக்குப்பொருளாய விஷ்ணுவை

இச்சூக்தத்துக்குப் பொருளாக்கவேண்டி இடுகுறித்தொகைச் சொற்கள் தொகையான விடத்தும் முறைபிறழ்ந்தவிடத்தும் தம் இடுகுறிப்பொருளை விடாவென்பதல்லவோ அவரது நவீனசித்தாந்தம். இதை மனதிலிருத்தி மறவாது மெள்ள மெள்ள பூர்வாநுவாகத்திறுதிமந்திரத்தைப்பிடித்துப் பாரும். அங்கு 'அப்பெரியோரே சுவர்க்கத்தெய்தினர். சாத்தியரமரர் முன்னுளபெரியோர்' என்னும் ஈற்றடியில் அமரர் முன்னுளஎன்ற விரண்டு சொல்லையும் முறைபுரட்டி முன்னுளவமரர் பெரியோர் சாத்தியரென்பதாதி கூட்டி அவருள்ளவுலகமே இச்சூக்தவழிபாட்டுக்குப்பயனுமென்னுது தப்பவழியில்லை. முன்னமரர் (பூர்வதேவர்) என்பது அசுரருக்குப்பேரென்பது நிகண்டு விற்றானே கண்டிருப்பீர். ஈண்டச்சொல் தொகையின்றித்தொடர்பற்று நிற்பினும் நுங்கொள்கையின்படி தன் இடுகுறிப்பொருள்களை விடாதாதலின் நீர் விஷ்ணுபரத்துவத்துக்குக் கூறிய நியாயம் நீர் செய்த எம்பெருமான் வழிபாட்டுக்குப்பயனாக, அன்றுபலியிடஞ்செய்த வஞ்சகத்துக்குப்பயனாய் உம்பிரானேவற்றொழில் பூண்டு ஏகிய நல்லுலகமாகிய அசுர உலகம் அமைந்தது கண்டு உமது தலைவிதியை நினைத்து இனி இவ்வித ஏதுப்போலிகளையெடுத்துக்காட்டி ஆன்றோரவைக்கண்ணவமானமெய்தா தொழி[illegible]

(3) நீர் காட்டிய மூன்றும் ஏதுவாய் இ[illegible]டா[illegible]ள்ள இலக்குமிபதித்துவமும் உமக்குடயோமில்லையென்றும், [illegible]சுருதிகளுக்கு விரோதமென்றும் முன்னரே விரித்தோமாதலால் மீண்டும் அவசியமில்லை.



(4) புருஷைத்தால் = நாராயணத்தால் என்றும் நாராயணங்களால் உபஸ்தானம்செய்யவேண்டுமென்றும் பலரிஷிவசனங்களில் நாராயணமென்ற பெயராலழைக்கப்படுவதே இது நாராயணமென்றதற்குகாலாமேதுவாம். இதைநாராயணன் என்னுமோர் இருடியாற்காணப்பட்டமையாலென்னும் மாதவீய பாடியத்தையும் ஆயிரஞ்சென்னியனாதி பதினாறு மந்திரங்களுக்கு நாராயணன் ரிஷி புருஷன் தேவதையென்ற யாஸ்கர் வசனத்தையும், நாராயணன் கண்டபுருடசூக்தத்தால் அக்கினி சயனோபஸ்தானம்செய்கஎன்ற வாதூலமுனிவர் திருவாக்கையும் காட்டி இச்சூக்தத்துக்கு நாராயணமென்ற பெயர் அவன் ரிஷியாதல்பற்றியேயெனநாட்டி அவர்கள் துராக்கிரகத்தையோட்டி மறுக்க.

(5-6) அதர்வணவேதத்திலுள்ள பதினெண் மகா சாந்திப்பிரகரணத்திலிச்சூக்தத்தை வைஷ்ணவசாந்தியில் வினியோகித்ததும், விஷ்ணு பூஜையில் பல ஸ்மிருதிகளில்விதித்ததுமே இது விஷ்ணுபரமென்பதற்கு

5-6-ம் ஏதுக்களாம். அவ்வேதுக்களைச்சர்வதேவதாசொரூபமான பரமேசுரனைப்ரதிபாதிக்குமிச்சூக்தம் சிவபூஜையிலும், விஷ்ணுபூஜையிலும், குபேரபூஜையிலும், மற்றும்எத்தேவர்பூஜைக்குத் தனிமந்திரமில்லையோ அத்தேவர்பூஜைகளிலும் விநியோகிக்கப்பட்டு வருதலால் விநியோகத்தாலிச்சூக்தத்தின தேவதையை இன்னதெனத்துணிந்தோதவேலாதென ஆசிரியர் மறுத்தனர்.

(7-8) விஷ்ணுசங்கிதையிலிதைச் சேர்த்ததும். புராணங்களிலிதிற்கண்டவாறு புண்டரீகக்காட்சனைத்துதித்ததும் மற்றையவிரு வேதுக்களாம். அவை 'சந்நோ' முதலிய அப்புவாதிகளைக்குறிக்கு மந்திரங்கள் சநி முதலியோரைக் குறித்ததுபோலும் புராணங்களிலது சிவனிடத்துமமைந்ததாதலாலும் என்று காட்டி மேற்கண்ட ஏதுக்களைத்தொலைத்தனர் தொல்லாசிரியர் சிறக்க,

இங்ஙனம் புறமதத்தவர் கண்ட வேதுக்களை நட்டப்படுத்தியதேயன்றி உமக்கு உமாபதியே பொருளென்பதற்குத் திட்டமானவேதுக்கள் எவையெனில் அவைகளைச்சுருக்கிக்காட்டுவாம். இச்சூக்தத்தில் புருடன் ஸஹஸ்ர[illegible] ஈசானன் மகானென்கிற நான்கு பெயர்களும் ஈசானனுக்கு இடுகுறியாதலால் இவைநான்கும் நாலுவேதுக்கள். "ஆயிரஞ்சென்னி[illegible]யும், [illegible]சென்னியினின்று ஈயுமுண்டாய" தென்றும் ஆதித்[illegible] வென்றும், பிரமன் மூன்றாமெவனைக்கூறினன் என்றும், இந்திரன் [illegible]ல்லாமெதிர்த்தவன் என்றும், அந்தஹரீயுமிலக்குமிதானும் பத்தினிஎன்னப்படுவாரன்றே என்றும் இரவும்பகலுமிருபாலாரும் என்றும், தாராகணங்களவனுருவாகும் என்றும், இவ்வெண்குறிகளும் முறையே வீரபத்திரமூர்த்தி, வியோமகேச மூர்த்தி, சுவர்ணவர்ணமூர்த்தி, மகரிஷிகளுக்கோதிகாலத்தில் பிரமனுபதேசித்தமூர்த்தி, அபிலமீன்ற அம்மையிடமாகியவிந்திரனன்நிந்தமூர்த்தி, ஓங்காரப்பொருளாகிய தேவியார் மணாளனாயஉமாபதிமூர்த்தி, மங்கைபாகமூர்த்தி, காலசக்கிரமூர்த்தியென்கிற எண்வகைமூர்த்திகளாய் அவ்வமூர்த்தியிடமமைக்கனவெனக் குறித்தலால், அவைஎட்டையும் எட்டேதுக்களாகக்கொள்க. இவையெலாமோர்புறங்கிடக்க. ஆதியில் நாராயணன் தானறிவேனென விறுமாந்து கூறியது ஈசனையன்றி வேறு யாரையென்று கூறலாம். ஆகவேதுக்கள் பதின்மூன்றாயினவன்றோ? இதுமட்டோ! 'உமாசகாயனை' பரமேசுவரனை, பிரபுவை, திரிலோசனனை, நீலகண்டனை, பிரசாந்தனை, தியானித்து முனிவர் அடைவர். பூதகாரணனை சமஸ்த சாட்சியை இருளுக்கப்பால், என்றும் ஸ்ரீ கைவல்யோப

நிட்டதம் கூறுவதை ஏகதேச முகத்தான் அனுவதித்தலும், எங்கு முகந்த நீலகண்டம பெற்றவன், எல்லாப்பூதங்களுள்ளத்துள்ளான், எங்கும் வியாபித்தவன் பகவானாதலால், எங்கு நிறைந்தவன் ஏகசிவனே என்றும், வேறிலை வழி வீடுகூடிடவென்றும் சுவேதாசுவதரோபநிடதங்கூறியதை இஃதா ஏகதேசத்தால் அநுவதித்தலும், அதேயுபநிடதத்திலுள்ள சிலமந்திரங்களைத் தன்றிருமேனியிற்றெடுத்தலும், இச்சூக்தத்துக்குச் சிவபரம் சாதிக்கவேதுவாகும். மீண்டும் பூர்வபக்ஷிகள் கூறியவாறு சிவபூஜையில் விநியோகமும், இச்சூக்தத்திற்கண்டபடி புராணங்களிற்காணப்படும் சிவஸ்தோத்திரங்களும் ஏதுக்களாகலாம். ஆகவே யாமிவையே ஏதுக்களாமென எண்வகுத்தோதாதொழிந்தனம். வைதிகர்காள்! இவ்வவைதிக வைதண்டிக பாஷண்டர்கள் எமது இளம்பிறைசூடியபெருமான் அளவில் பெருமைக்களஞ்சியமான புருஷசூக்தச் செந்நெற்பூமியை யாக்கிரமித்தவலமாக்காது, கௌணமாயமைந்த ஏதுக்களையொழித்து வெளிப்படையாய் எப்பாஷண்டர்களாலும் மறுக்கவொண்ணாப் பேருற்றல் பெற்ற பதினொன்றேதுக்களாகிய பதினொன்று முட்படல்களிட்டு இவ்வெஜுர்வேத புருஷசூக்த நற்பூமியில் பரமேசுவர பாரம்ய நல்விதைவிதைத்து, அதன் பயனை அயின்றோர் என்றும் குன்றாப்பர சிவானந்தைக்கியப் பெருவாழ்வுபெறுமாறு இச்சூக்தத்துக்கோர் மொழிப்புரை கூறினும். இக்கோலாகலமே இதரநூல் மறக்கப்போதுமாதலால் உலகெலாங்கடந்த உண்மைப்பொருளின் திருவருள் விலாசலேசலேசமீதென்று அவன்பால் மனஞ்செலுத்திப் பரமமங்களகரந்த பரிபூர்த்தி நற்சமயத்தில மங்களாசரணபர சிவஸ்மிருதி செய்கின்றும்.

வைதிகசைவமார்க்கவரம்பிகந்தொழுகுந்திய
கைதவருளங்கலங்கக்கருணையிற்புருடசூக்த
மெய்தருபொருள்விரித்தெமவினைகளைசீனிவாச
னுய்தருபுகழெஞ்ஞான்றுமுலகெலாம்வெல்கமாதோ.

முற்றிற்று

---